# கல்கி

KALKI 1.10.95
ரூ. 3.00



மனிதனை
வெல்லுமா
கம்ப்யூட்டர்
மூளை?




எண்ணங்களுக்கு இசைய வண்ணங்களின் கலவை - ஷார்தா !




Sharda® SAREES BELGAUM

பாலியஸ்டர் பட்டுப் புடவைகள் மற்றும் பாவாடைகள்

எல்லா பிரபல ஜவுளிக் கடைகளிலும் கிடைக்கும்

# ஆசை



**மா**ரியாத்தா டான்ஸ், அப்பா, ஆயா, ஆத்தா செண்டிமெண்ட் கசுமாலங்கள், திரை கிழியும் உதை உற்சவம், கதற அடிக்கும் கொயர் வசனங்கள் ஏதுமின்றி பச்சக்கென்று மனசில் ஒட்டிக் கொள்ளும்படியான ஒரு படம் - ரொம்ப நாள் கழித்து.

கரணம் தப்பினால் விரசம் எட்டிப் பார்த்துவிடக் கூடிய 'மச்சினி மேல் ஆசைப்படு கிற விஷயம். ஆனால் கேரக்டர்களைச் செதுக்கும் நேர்த்தியிலேயே டைரக்டரின் முழுக் கவனமும் இருந்து விடுவதால் சாபக்கேடான விஷயங்கள் சாமர்த்தியமாகத் தவிர்க்கப்பட்டிருக்கின்றன.

கொட்டும் மழையில், நடுரோடில் காரை நிறுத்தி, "எனக்காக நீதான் உங்கப்பா கிட்ட உன் தங்கையைப் பொண்ணு கேக்கணும்" என்று பிரகாஷ்ராஜ் தீர்மானமாக ரோகிணியிடம் சொல்கிற போது யாருக்கும் அதிர்ச்சி வரும்.

வில்லத்தனமாக அந்தக் கேரக்டரை சாடிஸ்ட் வில்லன் என்றுதான் சொல்ல வேண்டி இருப்பினும் திரையில் எல்லா வகையிலும் ஹீரோ அவர்தான். நமக்கு அதிகம் பரிச்சயமற்ற, வித்தியாசமான, நாசூக்கான வில்லத்தனம்.

மைத்துனிக்கு ஒரு காதலன் இருக்கிற விஷயம் தெரிய வருகிறபோது, தாங்க முடியாமல், தன் கையாலாகாத்தனத்தை நினைத்து - வெறுத்து, கைக் குழந்தையிடம் ஒரு கூச்சல் போடுகிறாரே - ஒண்ணாங்கிளாஸ்!

நடிப்பில் பிரகாஷ்ராஜுடன் போட்டி போடுபவர் பூரணம். அந்த அப்பாவி மாமனார் ரோலை வேறு யார் இத்தனை நேர்த்தியாக செய்ய முடியும்?

மாப்பிள்ளையை நூறு சதம் நல்லவன் என்று நம்பி, கடைசியில் அவன் சுயரூபம் தெரிய வருகிறபோது உடைந்து அழுகிற இடம் வெகு உருக்கம். (நன்றி : நாயகன்)

அப்புறம் அந்த இளம் ஜோடி அஜித்குமார் - சுவ(ப்)?லட்சுமி. நடிக்க, பேச வைக்கிற ரிஸ்கை புத்திசாலித்தனமாகத் தவிர்த்திருக்கிறார் டைரக்டர். டைட்டோ டைட் குளோஸப்பில் கண், கன்னம், உதடு, மூக்கு நுனி என்று ப்ளோ-அப் காட்டி, விழி விரிய வைத்திருப்பதோடு சரி.

படத்தில் ஜீவாவின் கேமராவின் பங்கு மிக அதிகம். 'மூடு'க்கு ஏற்ற லைட்டிங் கொண்டு வர மெனக்கெட்டிருக்கிறார். ஒரு சின்ன மோதலைத் தொடர்ந்து வரும் சேஸிங் காட்சியில் சந்தேகம் வருகிறது - தமிழ் சினிமாதானா?

உரக்க ஒரு விஸில் அடிக்கலாம். இந்தப் படத்தில் ஒரிஜினல் தேவா! ஒரு பாடலும் சோடை போகவில்லை. தொடரக் கடவது.

டெல்லி ஐ.ஐ.டியில் 'ஐயோ, ஐயய்யோ' என்று செந்தமிழ்(?)க் கூத்து நடப்பதும், போதைக் கடத்தலில் கைதாகும் ஹீரோ ஏன்-எப்படி-எதனால் என்று தெரியாமல் ஜூனியர் விகடன் அட்டையில் விடுதலை ஆவதுமான மிகச்சில அபத்தங்களை விலக்கிப் பார்த்தால் - something different!

— ஆர்.பி.ஆர்.

"ஐயாவுக்குத் தூக்குப்போடு!"

## பரிதாபச் சிலைகள்!

ஐந்தாவது உலகத் தமிழ் மாநாடு 1981 ல் மதுரையில் நடைபெற்ற போது, நகரின் பல பகுதிகளில் தமிழ் அறிஞர்களின் சிலைகள் திறக்கப்பட்டன. அவசரக் கோலத்தில் அமைக்கப்பட்ட அந்தத் தலைகள் (சிலைகள் அல்ல - தலைகள்தான்) இன்று பொலிவிழந்து பரிதாபமாகக் 'காட்சி தருகின்றன. திறப்பு விழாக் குறிப்புகள், போஸ்டர்களால் மறைக்கப்பட்டு விட்டன. அரசரடி பகுதியில் உள்ள 'தென்றல்' திரு. வி.க. சிலையும் தல்லாகுளம் பகுதியில் உள்ள 'தாத்தா' உ.வே. சாமிநாதய்யர் சிலையும் ரொம்பப் பரிதாபம். தனியார் நிறுவனங்கள் தத்து எடுத்து சிலைகளைப் ப்ராமரித்து வந்தால் தமிழுக்குச் செய்யும் தொண்டாகும்.

— எஸ். சங்கரன், பெரியகுளம்.

## பாரதியார் மன்னிக்கட்டும்!

செந்தமிழ் நாடெனும் போதினிலே
- குண்டுச்
சத்தம் வந்து பாயுது காதினிலே
- எங்கள்
அன்னையின் நாடென்ற பேச்சினிலே
- ஒரு
ஆவேசம் பிறக்குது மூச்சினிலே.

பேதம் நிறைந்த தமிழ்நாடு - உயர்
அதிகாரம் செறிந்த தமிழ்நாடு - இளம்
காவல் நிலையத்தில் கற்பிழந்து
- இளம்
பெண்கள் துடிக்கும் தமிழ்நாடு.

நீலத் திரைக்கட லோரத்திலே - நின்று
நித்தம் தவஞ்செய் குமரிஎல்லை - வட
மாலவன் குன்றம் இவற்றிடையே
- புலிகள்
மண்டிக் கிடக்குந் தமிழ்நாடு.

கட்-அவுட்டில் சிறந்த தமிழ்நாடு
- புதுக்
கனவுகள் பிறந்த தமிழ்நாடு - பல
கொலைகள் புரிந்து குதூகலிக்கும்
- கொடும்
பாவிகள் நிறைந்த தமிழ்நாடு.

— என். உஷாதேவி, மதுரை - 9.

## புதுமை பஸ்!

மதுரை உசிலம்பட்டியிலிருந்து பாண்டியன் போக்குவரத்துக் கழகம் இரண்டு பேருந்துகள் இயக்குவதில் புதுமை செய்துள்ளது. அதாவது மற்ற ஊர்களில் L.S.S., Point to Point என்று குறிப்பிட்ட இடங்களில் மட்டுமே நிற்கும் பேருந்துகள் உள்ளன. ஆனால் உசிலம்பட்டியிலிருந்து ஓடும் இந்த இரண்டு பேருந்துகள் 'எங்கும் நிற்கும்', 'இது நம்ம ஊரு வண்டி' என்ற வாசகங்களோடு பயணிகள் எங்கு நிறுத்தச் சொன்னாலும் அங்கு நிறுத்தி, எங்கே கையைக் காட்டி மறித்தாலும் நிறுத்தி ஏற்றிச் செல்கின்றனர். இதுபோல் வேறு எங்கும் உண்டா?

— எ.எஸ். முத்துச் செல்வன், அய்யங்கோட்டை.

## திருவிழா மாறிய கதை!

சித்திரைத் திருவிழா சித்திரை வீதியில் நடப்பதில்லை. மாசிவீதியில்தான் நடக்கிறது. மாசி மாதத்தில்தான் அம்மன் திருக்கல்யாணம், தேரோட்டம் நடந்தன. ஆனால் மாசி மாதம் அறுவடைக் காலமாதலால் தேர் இழுக்க ஆள் கிடைக்கவில்லை! எனவே, சித்திரைக்கு மாற்றியவர் திருமலை மன்னர்.

— முருகேசன், தேனி.

## பருத்தி விளைந்தும் நூல் இல்லை!

"உன் ஊருக்கு நூல் நிலையம் வேண்டி மாவட்ட ஆட்சியருக்குக்

கடிதம் எழுது!" என்ற வினாவுக்கு ஒன்பதாம் வகுப்பு மாணவன், தேர்வில் எழுதினான் இப்படி:

"ஐயா! எங்கள் ஊரில் பருத்தி நன்கு விளைகிறது. அதைப் பயன்படுத்தத் தகுந்த நூல் நிலையம் இங்கு இல்லை! எனவே, எங்கள் ஊரில் நூல் நிலையம் ஒன்று அமைத்துத் தருமாறு வேண்டுகிறேன்."

ஒரு வேளை "லைப்ரரி" என்று கேட்டிருந்தால் ஒழுங்காக எழுதியிருப்பானோ?

— ஒ. லால்சுரேஷ் பாபு, உசிலம்பட்டி.

## கைடு இல்லாத காரணம்!

சமீபத்தில், மதுரை மீனாட்சி அம்மன் கோவிலில் வெளிநாட்டு தம்பதியர் இருவர் சரியான வழிகாட்டுதல் இல்லாமல் திணறிக் கொண்டிருந்தனர். இதைக் கண்ட நானும் எனது நண்பர்களும் அவர்களுக்கு திருப்தியளிக்கும் வகையில் மீனாட்சி அம்மன் கோவிலைச் சுற்றிக் காட்டி 'கைடு' பண்ணினோம். எல்லாம் முடிந்தவுடன், அவர்களிடம், "நீங்கள் ஏன் கைடுகளை அழைத்து வரவில்லை?" என்று வினவினோம். அதற்கு அவர்கள் அளித்த பதில்: "இந்தியாவிலுள்ள கைடுகள் பணம் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டுள்ளனர். அதே சமயத்தில் உங்களைப் போன்று மனித நேயமுள்ள இந்தியர்களும் இருப்பதால்தான் நாங்கள் இங்கு வர விருப்பப்படுகிறோம்!" எனக் கூறி ஓர் அழகான பேனாவை பரிசாக அளித்தனர்.

— சி.எல். சரவணன், மதுரை - 1.

## தூக்குப் போடு!

மதுரையில் நீங்கள் ஹோட்டலில் சாப்பிட உட்கார்ந்திருக்கும் போது, உங்களைப் பார்த்து ஒருவர் 'ஐயாவுக்குத் தூக்குப் போடு!' என்பார். பயந்து விடாதீர்கள். தூக்குப் போடு என்றால் தூக்குப் பாத்திரத்திலுள்ள கூட்டு, பொரியல் போடு என்று அர்த்தம்!

— எஸ். மாரியப்பன், தேனி.



## என்ன தொடர்பு?

மதுரையிலுள்ள ஒரு லாரி புக்கிங் ஆபீஸுக்கும், போலீசாருக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. பெயரில்தான்! பெயர் இதோ : "தொந்தி லாரி புக்கிங் ஆபீஸ்!"

— வி. சிவா, மதுரை - 16.

## புதுமை வாசகம்!

பொதுவாக 'வேலை காலி இல்லை' என்கிற வாசகத்தைத்தான் கடைகளிலோ, நிறுவனங்களிலோ வெளியில் தொங்கவிட்டிருப்பார்கள். ஆனால் மதுரையில் ஒரு கடையில், 'வேலை காலி இல்லை' என்கிற வாசகத்தை இப்படி வேடிக்கையாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள்: 'இங்கே இருப்பவர்களுக்கே வேலை இல்லை!'

— பாப்ஜராஸ், மதுரை - 1.



இது தெள்ளத் தெளிவு. ஒரு இந்திய பிராண்ட்
காத்திருக்கிறது சர்வதேச போட்டிக்காக

சிகரத்தின் உச்சியிலே தனித்து நிற்கும் ஒனிடா கேஒய்.
தன்னிகரற்ற டிவியின் அனைத்து சிறப்பம்சங்களுடன் காத்திருக்கிறது.

சரி நிகர் போட்டிக்காக ... கடுமையான சவாலுக்காக

சவால் எனில் எப்படிப்பட்ட பிராண்டுகளிடமிருந்து ...
ஒனிடா கேஒய்யின் மகா சக்தி வாய்ந்த மாஸ்டர் கமாண்ட் கண்ட்ரோல் ...

Avenues O 419.95



உலகின் முதன் முதலான காரவ்கே தேர்வுடன் கூடிய
53 செமீ டிவியின் வெல்ல முடியாத தரம்...

அல்லது வீட்டிலேயே அரங்க ஒலியின் அனுபவத்தைத்
தரும் இதன் ஜி-ஹார்ன் ஒலி,
இவற்றைக் கண்டு மிரளாத பிராண்டுகளிடமிருந்து,
உலகிலே முன்னேற்றம் கண்ட சில நாடுகளில்
இப்போது இதே போன்ற பிராண்டுகள்
மெதுவே தலை தூக்கி இருக்கலாம்.

ஆனால் அவற்றோடும் போட்டியிடத் துடியாய் துடிக்கிறது
ஒனிடா கேஒய். வெற்றி வாகை சூடப்போவது ஒனிடாதான்...
மற்றவரை காக்கப்போவது கடவுள்தான்.




இந்தியாவிற்குப் பெருமை...
உலகிற்குப் பொறாமை.

ஒன்று போட்டுப் பக்கத்தில் பனிரெண்டு சைபர்.

யாருடைய சொத்துக் கணக்கு என்று கேட்க வேண்டாம். சராசரி மனித மூளையில், ஒரு கன சென்டிமீட்டரில் உள்ள திசுக்களின் தோராயமான எண்ணிக்கை இது!

நியூரான் (Neuron) என்ற இந்த ஒவ்வொரு திசுவும் ஒரு சூப்பர் கம்ப்யூட்டர். தகவலை வாங்க, வகைப்படுத்த, சேர்த்து வைக்க, தேவையான போது வெளியிட என்று, இந்தச் சின்னஞ்சிறு கம்ப்யூட்டர்கள் நாம் பிறந்ததுமே மும்முரமாக வேலையை ஆரம்பித்து விடுகின்றன.

இது அம்மா. ''நாசமாப் போறவனே... சோத்தைத் தின்னுட்டு வெளையாடப் போய் ஒழியேன்...'' இது 'தாய்மொழி'. 'கா... கா' என்று கரைவது காக்கை. அதன் நிறம் கருப்பு... இப்படி சகலவிதமானது பற்றியும் தகவல்கள்.

'சிவப்பு நிறமாக, பற்றி எரிகிறதின் பெயர் நெருப்பு' என்று மூணு வயதில் மூளையின் ஒரு திசுவில் போட்டு வைக்கிறோம் என்றால், நாலு வயதில் தீயைத் தொட்டு அலறி, 'நெருப்பு சுடும்' என்று இன்னொன்றில் தகவல் சேர்த்து வைக்கிறோம்.

அப்புறம், நாற்பது வயதில் தீயைப் பார்த்தாலும், நொடியில் கோடானுகோடி திசுக்களுக்கு இடையே இந்த இரண்டுக்கு மட்டும் தகவல் இணைப்பு ஏற்படுத்தி, கையைப் பின்னால் இழுத்துக் கொள்ளக் கட்டளை பிறப்பிக்கிறது மூளை. இது நினைவும் அனுபவமும் சார்ந்த அறிவு.

ஆபீஸில் புதிதாக வேலைக்குச் சேர்ந்திருக்கும் இளம்பெண் அசப்பில் நக்மா போல இருக்கிறாள். 'நக்மா' என்று மூளையில் ஏற்கெனவே நீங்கள் கனகச்சிதமாகப் பதிந்து வைத்திருந்த வடிவத்தோடு, புதுமுகத்தை ஒப்பிட்டுப் பார்த்து சிலாகிப்பது ஒப்புமை அறிவு.

இதை அப்படியே சாயந்திரம், மனைவியிடம் சொல்லி, 'ணங்' என்று காப்பித் தம்ளர் பக்கத்தில் வைக்கப்பட, மேற்கொண்டு பேசினால் அடுத்தவேளை சாப்பாடு கிடைக்காது என்று உணர்ந்து நிறுத்திக் கொள்வது, உள்ளார்ந்த தர்க்கரீதியாகப் பெறப்பட்ட அறிவு.

இன்னும், 'ஆறு ஐந்து முப்பது', 'அயிகிரி நந்தினி சொல்வது அனந்தராம தீட்சிதர்', 'அக்கியாமிலா பாட்டுக்கு ஆடுவது மாதுரி தீட்சித்' என்று எல்லாம் படித்தும், கேட்டும், பார்த்தும் வந்த அறிவு...



• 'சந்த்தோஷம்'



• ரேவதி : அடித் தொண்டையில் கிறீச்!

# மனிதனை வெல்லுமா கம்ப்யூட்டர் மூளை?

அறிவு என்ற அதியற்புதமான சமாசாரத்தைக் கொஞ்சம் போலவாவது கம்ப்யூட்டரைக் கொண்டு உருவாக்கியே தீருவது என்று 1970களில் கிளம்பிய புத்திசாலிகள் சாதித்துக் காட்டியதுதான் 'செயற்கை அறிவு' என்றதான ஆர்ட்டிபிஷியல் இண்டலிஜென்ஸ் (Artificial intelligence).

'மேதமை அமைப்பு' என்னும் எக்ஸ்பர்ட் சிஸ்டம் (Expert system) தான் இந்த வகையில் பிள்ளையார் சுழி போட்டது. என்ன அது?

ஒரு பெரிய தொழிற்சாலை. விதவிதமான இயந்திரங்கள். கச்சாப்பொருளாகக் கன்வேயர் பெல்ட்டில் நகர்ந்து ஒவ்வொரு இயந்திரமாகப் புகுந்து, படிப்படியாக உருமாறிக் கடைசியில் தேவையான உற்பத்திப் பண்டமாக வெளியே தள்ளுகிற சங்கிலித் தொடர் இயக்கம் ஒரு வினாடியில் ஸ்தம்பித்து நிற்கிறது.

நடுவில் ஒரு மெஷின் ஓடவில்லை. இஞ்சினியர்கள் கவனமாகச் சோதித்துப் பார்த்தபடி இருக்க, உற்பத்தி தடைப்பட்டு முதல் ஷிப்ட் முடிகிறது. இரண்டாம் ஷிப்டுக்கு வந்த மூத்த தொழிலாளி முருகேசன் என்னவென்று பார்க்கிறார். கேள்வி மேல் கேள்வி



• நெட்வொர்க் டெர்மினல்

யாகக் கேட்டு முழு விஷயத்தை அறிந்து கொள்கிறார்.

"அது ஒண்ணும் இல்லீங்க... பீச்சாங்கைப் பக்கம் ஓரமா ஒரு அலன்ஸ்க்ரு இருக்கு பாருங்க... அது அப்பப்ப லூஸாயிடும். முடுக்கி விட்டாப் போதும்..."

முருகேசன் ஒரு சின்னக் கருவியால் ஸ்குருவை முடுக்கி விட, இயந்திரம் தடதடவென்று ஓட ஆரம்பிக்கிறது.

பி.ஈ., எம்.ஈ. படித்த இஞ்சினியர்கள் பிரமிப்போடு பார்த்துக் கொண்டிருக்க, சின்னச் சிரிப்போடு நகர்ந்து போகிற 'மேதை' முருகேசன் படித்தது மூணாம் வகுப்பு. சர்வீஸ் முப்பது வருஷம்.

அங்கங்கே, ஒவ்வொரு தொழிற்சாலையிலும், பணியிடத்திலும் இப்படித் தம் தொழில் சம்பந்தப்பட்ட அனுபவ அறிவு நிரம்பிய மேதைகள் இருக்கத்தான் செய்கிறார்கள். இல்லாத பட்சத்தில்?

முருகேசன் போன்றவர்களின் அனுபவ அறிவைக் கம்ப்யூட்டரில் சேகரித்து வைக்க வழி செய்வதுதான் மேதமை அமைப்பு.

தொழிற்சாலையில் இருக்கப்பட்ட இயந்திரங்களைப் பற்றிய விவரங்கள், எதற்கு எந்தச் சூழ்நிலை ஒத்துவரும், எது சரிப்படாது, எதற்கு எப்போது என்ன மாதிரி நோக்காடு வந்தது, எப்படித் தீர்ந்தது என்பது போன்ற விவரங்கள் விலாவாரியாகத் தொகுக்கப்பட்டுக் கம்ப்யூட்டரில் பதிவு செய்யப்படும். இதை இயக்க, வினாவிடை பாணியில் ஒரு புரொகிராம். கம்ப்யூட்டர் திரையில் நகர்ந்து போகிற கேள்விகளுக்குக் கிடைக்கிற பதிலை வைத்து, முருகேசன் எடுத்த முடிவுக்குக் கம்ப்யூட்டரும் வரும். அப்புறம் ஒரு திருப்புளி மட்டும் இருந்தால், தீர்ந்தது பிரச்னை.

மருத்துவத் துறைக்கு, மேதமை அமைப்புக்கள் ஒரு வரப்பிரசாதம். 'நாக்கை நீட்டு.. இழுத்து மூச்சு விடு' என்று அதட்டுகிற நம்ம குடும்ப டாக்டரில் ஆரம்பித்து, ஒரு கன்சல்டிங்குக்கு ஆயிரம் ரூபாய் வாங்குகிற ஸ்பெஷலிஸ்டுகள் வரை பரவிய ஆழமான மருத்துவ அறிவை எல்லாம், நரம்பியல், இதய சிகிச்சை, கண் மருத்துவம் என்று ரகவாரியாகத் தொகுத்து மேதமை அமைப்புக்கள் வந்து கொண்டிருக்கின்றன.

இவற்றை இயக்கி, "என்ன ஆச்சு?" என்று கம்ப்யூட்டர் கேட்டு, "குழந்தை அழுதது..." என்று பதில் பெற்று, உடனே "கிரைப்வாட்டர் கொடு" என்று பிரிஸ்கிரிப்ஷன் வந்து விழாது. குழந்தையின் அழுகைக்கு ஆயிரத்தெட்டுக் காரணம். ஒவ்வொன்றாக அலசி ஆராயத் தேவையான எல்லாத் தகவலும் கம்ப்யூட்டரில் போட்டு வைக்க வேண்டும். அப்புறம் உங்கள் பதிலை கம்ப்யூட்டர் புரிந்து கொள்ள வைக்க வேண்டும். 'டயோரியா'வுக்கு ஸ்பெல்லிங்கைத்



• சிட்னி ஸ்டாக் எக்ஸ்சேஞ்ச் : குரலை வைத்து அடையாளம்

தப்பாக எழுதினாலும் (என்ன ஸ்பெல்லிங்!) பெரிய மனசு பண்ணிக் கண்டுகொள்ளாமல், சரியான தீர்வைச் சொல்ல வேண்டும்.

ஆகக்கூடி, விதிமுறைப்படி (Rule Based) அமைந்த இந்த மாதிரி மேதமை அமைப்புக்களை உருவாக்க நிறைய மெனக்கெட வேண்டும்.

அறுபது வருஷம் முன்னால் விஞ்ஞானிகள் அமெரிக்காவில் எங்கேயோ நிலத்தடியில் இருப்பதாக உறுதிசெய்த மாலிப்டினம் என்ற தனிமத்தைப் போன வருஷம் வரை அன்னார் தேடிக் கொண்டே இருக்க, அமெரிக்காவின் நில அமைப்பைப் பற்றிய விவரங்களை ஒரு 'மேதமை அமைப்பு' அலசி ஆராய்ந்தது. "இங்கே தேடுங்கய்யா... கிடைக்கும்" என்று அது தீர்மானமாகச் சொன்ன இடத்துக்குக் கடப்பாறையோடு ஓட...

கண்டார் மாலிப்டினத்தை!

இப்பேர்க்கொத்த எக்ஸ்பர்ட் சிஸ்டம் உருவாக்குகிற எந்தரோ மகானுபாவுலு... அந்தரிகி மில்லியன் கணக்கில் டாலர் பிராப்தி.

மேதமை அமைப்பை விடக் கொஞ்சம் அதிகம் புத்திசாலித்தனம் கொண்டது மூளை வலை என்ற நியூரல் நெட்வொர்க். (Neural Network).

மேதமை அமைப்பில், இருக்கப்பட்ட அனுபவத்தை எல்லாம் தகவலாகப் போட வேண்டும். புதுசு புதுசாக ஏற்படுகிற அனுபவம் ஒன்று விடாமல் பின் இணைப்பாக உள்ளே சேர்க்க வேண்டும். உதாரணமாக, ஜலதோஷம் காரணமாய் காது அடைத்துக் கொண்டால் தலை சுற்றக்கூடும் என்ற தகவலைத் தந்தாலன்றி கம்ப்யூட்டரால் அதைக் கண்டுபிடித்து சிகிச்சை சிபாரிசு செய்ய முடியாது. இருக்கிற தகவலை மீறிய சூழ்நிலை ஏதாவது ஏற்பட்டால், "தெரியாது நயினா..." என்று கம்ப்யூட்டர் ஜகா வாங்கி விடும்.

மூளை வலையில் இந்தப் பிரச்னை இல்லை. மனிதனைப் போலவே கம்ப்யூட்டரும் இருக்கிற தகவலை வைத்துக் கற்றுப் புதிய தகவலை உருவாக்கிக் கொள்ளும்.

மனித மூளை, தேவையான தகவல்களின் அடிப்படையில் ஒரு பிரச்னையை அணுகி ஆராய்ந்து முடிவு எடுப்பது போல, மூளைவலை அமைப்பு செயல்படும்.

விடிந்தும் விடியாததுமாகக் கோடி வீட்டுக் குப்புசாமி வந்து நிற்கிறார். உப்புப் பெறாத விஷயமாகப் பேசிக் கழுத்தறுக்கிறார். உள்ளே இருந்து கூப்பிடுகிறார் உங்கள் மனைவி.

"இவரு ரெண்டு மாசம் முந்தி இப்படித்தான் ஒருநாள் சாயந்திரம் வளவளன்னு பேசிட்டு, கௌம்பற போது நூறு ரூபா வாங்கிட்டுப் போனாரு. பதினஞ்சு நாள் முந்தி, பக்ரீத்துக்கு என்னைக்கு லீவுன்னு கேக்க வந்துட்டு, இருபது ரூபா... இப்ப ஞாயித்துக் கிழமையாப் பார்த்து வந்திருக்கார்... சொல்றதைச் சொல்லிட்டேன்... ஜாக்கிரதை..."

குப்புசாமியின் நாளது தேதி வரையான நடவடிக்கைகளை வரிசையாக நினைவுபடுத்தி, 'வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்காதது' என்ற ஒரே மாதிரியான செயல்பாட்டை (Pattern) இனங்கண்டு எச்சரித்துத் தாய்க்குலம் உஷார்ப்படுத்தாவிட்டால், மேற்கொண்டு நூறோ இருநூறோ வராத கணக்கில் போயிருக்கும்.

இந்த மாதிரியான பேட்டர்ன் ரெகக்னிஷன் (Pattern Recognition) மூளைவலையில் பிரதானமான அம்சம். இது ஒளி, ஒலி மற்றும் பல்வேறு ரூபத்திலான தகவல்களிலிருந்து பிரித்தறியப்படும் பேட்டர்னாக இருக்கலாம்.

சமயத்தில் மனித அறிவுக்குக் கூடப் புலப்படாத சில அபூர்வமான 'ஒரே மாதிரியான போக்குகளை'க் கண்டுபிடிக்கிற மூளைவலைகள், மேல்நாடுகளில் கிரடிட் கார்ட் மோசடிகளைத் தவிர்க்கப் பயன்படுகின்றன.

தில்லுமுல்லுகளைக் கண்டுபிடிக்க மட்டுமில்லை, வந்து குவிகிற கடன் விண்ணப்பங்களை அலசி, இன்னாருக்குக் கொடுத்தால் நிச்சயமாகத் திரும்பி வரும் என்று சொல்லக் கூடிய நியூரல் நெட்வொர்க்குகள் கூட புழக்கத்தில் உள்ளன!



# பார்க் டவுன்
## பெனிபிட் பண்ட் லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம். துவக்கம் 1985 Post Box No: 2806

223, தங்க சாலை, (கந்த கோட்டம் அருகில்) பார்க் டவுன், சென்னை-3 போன்: 582676, 564354

கிளை அலுவலகங்கள்: 2 கிழக்கு மாடவீதி, திருவான்மியூர், சென்னை-41 போன் 413582, 416417

P-995,இரண்டாவது அவென்யு, 12-வது மெயின்ரோடு ஜங்ஷன், அண்ணாநகர், சென்னை-40 போன் 6262656, 6280750



### பிக்சட் டிபாசிட்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு * |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

**21%** 5 வருடங்கள் ரூ.50,000/- அதற்கு மேலும்

### PB பாண்டு

| முதலீடு | காலம் | திரும்பப் பெறுமதொகை |
|---|---|---|
| ரூ.25,000 | 60 மாதம் | ரூ.70,000 |

### குழந்தைகள் கல்வி நலத்திட்டம்

L.K.G. முதல் கல்லூரி தொடக்கம் வரை

வைப்புத் தொகை ரூ. 5,100/-

3-ஆம் ஆண்டு நிறைவிலிருந்து தொடர்ந்து 12 ஆண்டுகள் ரூ.500/- பெறலாம். திட்ட டெபாசிட் காலத்திலிருந்து 16, 17-வது ஆண்டுகளில் தலா ரூ.1,000/- வீதமும். 18-ம் ஆண்டு துவக்கத்தில் ரூ.75,000/-ம் வழங்கப்படும்.

நலத்திட்டத்தின் 5% மாணவர்களுக்கு +2 அரசுத் தேர்வு மதிப்பெண் அடிப்படையில் ரூ.25,000/- பரிசாக ஒவ்வொருவருக்கும் நிதி நிறுவனம் வழங்கும்.

திட்டத்தின்பயனை உங்கள் மழலைச் செல்வங்களுக்கு வழங்கி மன நிம்மதி பெறுவீர்! மகிழ்ச்சி அடைவீர்!!

### காமதேனு மாபெரும் திரும்பப் பெறும் திட்டம்

| டிபாசிட் திட்டம் 15 ஆண்டுகள் | 5-ம் ஆண்டு நீங்கள் பெறும் தொகை | 10ம் ஆண்டு நீங்கள் பெறும் தொகை | 15ம் ஆண்டு பெறும் தொகை |
|---|---|---|---|
| Rs.6,320 | Rs.6,000 | Rs.6,000 | Rs.56,320 |

### கனகதாரா டிபாசிட்

ரூ.50,000/- முதலீடு செய்வீர் 10ஆம் ஆண்டு முடிவில் ரூ.50,000/- பெறுவீர் அடுத்த 20ஆம் ஆண்டு முடிவில் ரூ.1 கோடி பெறுவீர்

### செல்வக்களஞ்சியம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| Rs.7,500 | 15 Yrs | Rs.1,25,000 |
| Rs.9,000 | 15 Yrs | Rs.1,50,000 |

### பொற்குவியல் திட்டம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| மாதா மாதம் ரூ. 100/- | 25 Yrs | Rs.3,00,000 |

### வெகுமதி முதலீட்டுத் திட்டம் - II

ரூ.3450/- செலுத்துவீர். 252 மாதங்கள் நிறைவில் ரூ.2 லட்சம் பெறுவீர்.

**சேமிப்பு திட்டம் 10% P.a.**

### மறு முதலீட்டுத் திட்டம்

உங்கள் தொகை 45 மாதங்களில் இரட்டிப்பு ஆகும்

| டிபாசிட் | 12 மாதம் | 24 மாதம் | 45 மாதம் | 60 மாதம் |
|---|---|---|---|---|
| Rs.1,000 | Rs.1,184 | Rs.1,430 | Rs.2,000 | Rs.2,535 |

**பென்ஷனர் நலத்திட்டம் 20% P.a.**

ரூபாய் 10 ஆயிரமும் அதற்கு மேலும்: காலம் 1 ஆண்டு வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.

**தங்க நகை கடன்**

Rs. 3,000 PER 10 GRAM

விடுகளின் பேரில் கடன் வழங்கப்படும். (உச்ச வரம்பில்லை)

ஆலோசகர்:

**P. பாலசுப்ரமணியம், B.Sc.**

முதன்மை அறங்காவலர்

கந்தகோட்டம், சென்னை - 3.

இயக்குனர் குழுத் தலைவர்:

**R. விவேகானந்தன், B.Com.**

☐ ரூ. 5/- செலுத்தி பங்குதாரர் ஆவீர். ☐ சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டும் ☐ வெள்ளி விடுமுறை

இத்தனையும் செய்கிறதோடு, கம்ப்யூட்டரையே கடனையும் சாங்க்ஷன் செய்ய வைத்து விடலாமே என்றால், வேண்டவே வேண்டாம் என்று சம்பந்தப்பட்டவர்கள் ஒட்டுமொத்தமாகச் சொல்லி விட்டார்களாம். கௌரவப் பிரச்னை!

**செ**யற்கை அறிவின் இன்னொரு முக்கியமான கூறு, குரல் அறிதல் என்ற வாய்ஸ் ரெகக்னிஷன். (Voice Recognition).

"கூறும்... கூறிப் பாரும்..." என்று மிடுக்காக வரும் சிம்மக் குரலோன் குரல்...

"என்னது இது..." என்று தழுதழுக்கிற பூர்ணம் விசுவநாதன் குரல்... "சந்த்தோஷம்..." என்று அழுத்தம் திருத்தமாக ரஜினியின் உறுமல் அடித்தொண்டடையில் கிறீச்சிடும் ரேவதியின் கோபக் கத்தல் இன்னும் நமக்கு வேண்டியவர்கள், வேண்டப்படாதவர் குரலை எல்லாம் நொடியில் அடையாளம் கண்டுகொள்கிறோம். இப்படிப் பழக்கமான குரல்களும் எல்லா நேரத்திலும் ஒரே மாதிரி இல்லை. மெல்லப் பேசும் போது, கத்தும் போது, ஜலதோஷம் பிடித்த போது என்று ஒரே குரலே அவ்வப்போது கொஞ்சம் வித்யாசத்தோடு ஒலித்தாலும், நாம் மற்ற தகவல்களோடு தொடர்புபடுத்தி இன்னார்தான் பேசுகிறார் என்று முடிவு செய்து கொள்கிறோம்.

இதையே கம்ப்யூட்டரில் செய்து காட்டி இருக்கிறார்கள். சிட்னியில் பங்குச் சந்தையில் மூளைவலை அமைப்பு அறுநூறுக்கும் மேற்பட்ட பங்குத் தரகர்களின் குரலை அடிப்படையாகக் கொண்டு இயங்குகிறது. 'ஷேர் மார்க்கெட்'டில் பங்கு வாங்க விற்க எழும் கூச்சலுக்கு நடுவே தனித்தனியாக குரல்களை இனம் கண்டு, 'குறைத்துக் கேட்டது யார்... கூடக் கேட்டது யார்...' என்று அறிந்து, தேவையான பதிவுகளைத் திறம்படச் செய்து முடிக்கும் இந்த அமைப்பு ஓர் அசுரசாதனை!

**ஒ**ரு மொழியில் கேட்டு, இன்னொரு மொழியில் மொழிபெயர்த்துப் பேச்சாக வெளிப்படுத்தக்கூடிய கம்ப்யூட்டர் அமைப்புகள் உண்டு. அவை இங்கேயும் வந்தால், ஓமக்குச்சி தமிழில் பேச, யமாகுச்சி ஜப்பானிய மொழியில் பேச, நியாய விலையில் கம்ப்யூட்டர் சிப்போ, உருளைக்கிழங்கு வறுவலோ மொத்தமாகவோ, சில்லறையாகவோ ஒருவருக்கொருவர் வியாபாரம் செய்யலாம்.

**தா**னியங்கி ரோபோட்டுக்களை (Robot) வடிவமைத்து இயக்குவதிலும் செயற்கை அறிவின் சீரிய பங்கு உண்டு. நகர்ந்து போகிற ரோபோட் சூழ்நிலைக்குத் தகுந்தபடி வளைய, நெளிய, நிற்க, திரும்ப, அசைய வேண்டும். இதற்காக ரோபோட்டில் உள்ள இயந்திர அமைப்பை (Manipulator) இயக்க, செயற்கை அறிவு ஆணைத் தொடர் கொண்ட கம்ப்யூட்டர் உள்ளே இருக்கும்.

மனத்தில் 'பளாரென்று அறை விடு' என்று நினைத்து, உடம்பில் இணைக்கப்பட்ட நியூரோ சின்தசைசர் மூலம் அந்த எண்ண அலையைத் தூரத்தில் நிறுத்தி வைத்த செயற்கைக் கைக்குச் (Bionic arm) செலுத்தி, எதிர்ப்பட்ட நபரைப் பேயறை அறைய வைக்க, விஞ்ஞானக் கதை போன்ற, ஆனால் அசலான சாத்தியக்கூறுகள் தென்படுகின்றன.

குழப்பத் தத்துவம் என்ற ஃபஸ்ஸி லாஜிக்கைக் (Fuzzy Logic) கையாண்டு, நெடுஞ்சாலையில் கார் ஓட்டிப் போகிறவர்களுக்கு ஒத்தாசை செய்கிற செயற்கை அறிவு அமைப்புக்கள் வரப் போகின்றன. சாலையின் சூழலைக் கவனித்து, 'இங்கே வேகத்தைக் குறை... இங்கே கூட்டு' என்பதோடு மட்டும் இல்லாமல், வழியில் அடுத்த பெட்ரோல் பங்க் எங்கே வரும்... குளிர்பானம் எங்கே கிடைக்கும்... என்று கூடக் காரோட்டிக்கு இவை சொல்லும். கம்ப்யூட்டரே ஸ்டியரிங்கைப் பிடித்து ஓட்டினாலும் ஆச்சரியமில்லை!

இத்தனைக்கும் மேலாக, செயற்கை அறிவு விளையாட்டாக, விளையாட்டுக்குப் பயன்படுத்தப்படுகிறது. முக்கியமாக சதுரங்கத்தில்.

வெள்ளையும் கருப்புமாக முப்பத்திரெண்டு காய்களைக் கிட்டத்தட்ட $10^{120}$ விதமாக (பத்து போட்டு பின்னால் நூற்று இருபது சைபர்) நகர்த்த முடியும்... ஹியூரிஸ்டிக்ஸ் (Heuristics) என்ற கணிதத் தத்துவத்தைக் கையாண்டு எழுதப்பட்ட செஸ் புரகிராம் கொண்ட கம்பயூட்டர், 1977ல் அமெரிக்காவில் பெரிய பிஸ்தாக்களோடு மோதி, மின்னசெட்டா ஓப்பன் சாம்பியன்ஷிப் பட்டத்தையே தட்டிக் கொண்டு போய் விட்டது!

அந்தச் சதுரங்கம் கிடக்கட்டும்– அரசியல் சதுரங்கத்தில் செயற்கை அறிவோடு கூடிய கம்ப்யூட்டர் ஆட வந்தால் என்ன ஆகும் என்கிறீர்களா?

சாரி... நம்முடைய தலைக்குள் இருக்கப்பட்ட இத்தனூண்டு மேதமை அமைப்பில் இதற்குப் பதில் இல்லை!

— **இரா. முருகன்**

அட்டை வண்ணப்படம் : **யோகா**

---

● ஸ்ரீரங்கத்தின் பழைய பெயர் வெளிதிருமுத்தம். இன்னும் ஸ்ரீரங்கத்தில் உள்ள ரிஜிஸ்டிரார் அலுவலகத்தில் ஸ்ரீரங்கத்திற்கு, வெளிதிருமுத்தம் என்ற பெயரே குறிப்பிட்டு எழுதப்பட்டு வருகிறது.

தகவல் : ஸ்ரீரங்கம் ரா. ராகவன்

தாய்த் தெய்வத்தின் திருவிழாக் களிப்பை மேலும் கூட்ட அவளது அருள் லீலையைப் பெருக்கும் அமுத காவியம்!

அரசி ராஜராஜேச்வரியும்
அழகி திரிபுரஸுந்தரியுமான
ஸ்ரீலலிதையின் சீரார் சரிதை



# ஸ்ரீ மாதா

## ரா.கணபதி

**விலை: ரூ.18.00**


திவ்ய வித்யா டிரஸ்ட்,
106/1 ஹபிபுல்லா சாலை,
தி.நகர், சென்னை - 600 017
(போன்:8283360)


ரேஷனிலே

மலிவாக கிடைக்கும்

கோதுமை, மைதா,

ரவைதனை

தரத்தோடு

பெறுவதிலே

நமக்கேன்

தாமதம்!





தமிழ்நாடு கோதுமை மேம்பாட்டுத் திட்டம்
129, 'அ' பிரிவு, முதல் மாடி
சிவாலயா கட்டிடம், 119, எத்திராஜ் சாலை
சென்னை - 600 105. ✆ 8265295





தமிழ்நாடு அரசு உணவுப்பொருள்
வழங்கல் மற்றும்
நுகர்வோர் பாதுகாப்புத் துறை

தமிழ்நாடு கோதுமை உருளை மாவு மில்களின் சங்கம் சார்பாக

## 26

"எனக்கு தெரிஞ்சவரைக்கும் உங்க மேல யாருக்கும் எந்த மரியாதையும் கிடையாது. நாச்சியப்ப செட்டியாரை தகனம் பண்ணும்போதே உங்களைப் பத்தித்தான் மட்டமா பேசினாங்க. அல்பத்தனமான ஆளுன்னாங்க. நீங்களா போய் யாரது சொர்ணலட்சுமின்னு கேட்டா பதிலே பேச மாட்டாங்க. ஆச்சி அனுப்பிச்சாங்கன்னு அங்க போய் நில்லுங்க. ஆச்சி விசாரிச்சனு வரச் சொன்னாங்கன்னு கேள்வி கேளுங்க. அப்பத்தான் மரியாதையே கிடைக்கும். பேச ஆரம்பிச்சுட்ட பிறகு மொள்ள மொள்ள சாய்ச்சுடுங்க. பொம்பளைய சாய்க்கறதுக்கு உங்களுக்குச் சொல்லியா தரணும்?'' வினாயகம் காரின் பின் சீட்டில் உட்கார்ந்து கொண்டு லட்சுமண செட்டியாருக்கு உபதேசம் செய்து கொண்டு வந்தான்.

லட்சுமண செட்டியாருக்கு அவன் உட்கார்ந்து பேசியவிதம் கோபத்தைக் கொடுத்தது. 'வேலைக்கார நாயே' என்று மனசுக்குள் வார்த்தைகள் கொப்பளித்தது. இவன் அண்டிக் கிடப்பவன் என்று ஞாபகம் வந்ததால் அடக்கிக் கொண்டார். காரியம் முடிந்ததும் இவனைத் தண்டிக்கலாம் என்று தள்ளிப் போட்டார்.

ஐம்பத்தி நாலு வயதாகியும், மனசுக்குள்ளிருந்து காமம் அகலவில்லை. காமம் பழக்கப்பட்ட ஒரு முரட்டுக் குதிரை போலிருந்தது. அறுத்துக் கொண்டு ஓடி விடுகிறேன் பார் என்று மனசுக்குள்ளேயே கால் தூக்கி மிரட்டிக் கொண்டிருந்தது. பகவதியை நினைக்கும்போதெல்லாம் அந்த குதிரை மிக ஆபாசமாய்



நடந்து கொண்டது.

நாப்பது ஏக்கர் நிலத்தை ஒரு பொட்டச்சி தனியா நிர்வாகம் பண்ணியிருக்கான்னா அவ இன்னா அற்புதமான பொம்பளையா இருக்கணும்! நாச்சியப்பனுக்கு மட்டும் அப்படி இன்னா அதிர்ஷ்டம்! முப்பத்தி ஏழு வயசல, இருபத்தியொரு வயசுப் பொண்ணு! இன்னா ஆனந்தம்!

பெண் என்பவளை சந்தோஷப்படுத்த மோகம் காரணமாவதில்லை. எதுவரினும் எல்லா நேரங்களிலும் நான் உனக்கு துணையிருப்பேன். மூன்றாம் மனிதருக்கு முன்னால் உன்னை தூஷிக்க மாட்டேன். உனக்கு மரியாதை குறைவான காரியங்களில் ஈடுபட மாட்டேன் என்கிற வாக்கும், வாக்கைத் தொடர்ந்த

பாலகுமாரன்

செயலும் தான் பெண்ணை சந்தோஷப்படுத்தும். சந்தோஷப் பட்ட பெண்தானே போகத்துக்குத் தயாராவாள்? ஏமாற்றுகிற ஆணை, பெண் அறவே வெறுக்கிறாள். முரடனை விட ஏமாற்றுபவன் கேவலமானவன் என்கிறாள்.

நாச்சியப்ப செட்டியார் பகவதிக்கு கொடுத்த நட்பும் நம்பிக்கையும் வேறு எவராலும் கொடுக்க முடியாது.

“சொத்து எழுதி வைச்சுடலாம் பகவதி. எந்த சொத்தும் தனியா இருக்கிற உன்னைக் காப்பாத்திடாது. தொந்தரவுதான் கொடுக்கும். என்னுடைய மனுஷாள் நான் இல்லாத போனாலும் உன்னை மரியாதையா நடத்து வாங்க. என் பொண்டாட்டியும், என் குழந்தைகளும் உன்னைய தங்களில் ஒருத்தராக நடத்துறாங்க. அப்படித்தான் நடத்தணும்னு சொல்லி வைச்சுருக்கேன். இதை சொல்றதுக்கும், இதை சரின்னு அவங்க ஏத்துக்கறதுக்கும் நான் ரொம்ப, ரொம்ப கஷ்டப்பட்டிருக்கேன். நீ நினைக்கறதை விட அதிகமான பொறுமையோட இருந்திருக்கேன். அதட்டி அன்பு செய்யச் சொல்ல முடியாது. ஆச்சி நல்ல மனுஷி. உன் பேருக்கு ஒண்ணும் எழுதி வைக்கலையேன்னு கவலைப்படாதே. எழுதி வைச்சாத்தான் இல்லாத பொல்லாத பேச்செல்லாம் வந்து சேரும்.”

சொத்து இல்லையென்பது கூட வலிக்கவில்லை. சொல் பேச்சு கேட்டு சுற்றி வந்து கொண்டிருந்த பிள்ளை இப்படி நடக்கின்றானே என்கிற ஆதங்கம்தான் நெஞ்சைத் துளைத்தது. இங்கு நடப்பதை ஆச்சிக்குத் தெரிவிக்க வேண்டும் என்று அவளுக்குத் தோன்றியது. எஸ்டேட்டில் வேலை செய்யும் விவரமுள்ள ஒரு கூலிக்காரப் பெண்ணிடம் அந்தக் கடிதத்தை ரகசியமாகக் கொடுத்து ஆச்சியிடம் சேர்க்கச் சொன்னாள். பதிலுக்குக் காத்திருந்தாள்.

**கா**ரிலிருந்து லட்சுமண செட்டியார் இறங்கியதைப் பார்த்ததும் பகீரென்றது. 'இந்த ஆள் ஏன் மறுபடியும்' என்று கேள்வி வந்தது.

“வணக்கம்மா” அவன் கைகூப்பியது வியப்பாயிருந்தது.

இந்தக் கிழவன் மோசமானவன் என்று முதல் பார்வையிலேயே தெரிந்து விட்டது. எடுத்தவுடன் மார்பைப் பார்க்கின்றவனை மனிதனாக எந்தப் பெண்ணும் மதிக்க மாட்டாள். அணுகுமுறையே தவறு. பார்வையிலேயே கோளாறு என்றுதான் இதற்கு அர்த்தம். ஆரம்பமே தவறாயிருக்கும் ஆண்களோடு பேசுவதோ, பழகுவதோ தேவையில்லாதது. ஆனால் சில சமயம் பேசித்தான் ஆக வேண்டும். சூழ்நிலை அப்படி அமையும்.

பகவதிக்கு 'வாங்க' என்று வரவேற்க இஷ்டமில்லை. “என்ன இந்தப் பக்கம் திடீர்னு?” என்று பொதுவாக வரவேற்றாள்.

“கையில ஒரு பதினைஞ்சு ரூபாய் இருந்திச்சு. காப்பித் தோட்டம் வாங்கலாம்னு வந்தேன். பொட்டியில காசு இருக்கு. அதை ஜாக்கிரதையா உள்ள வைக்கணும்.”

“பொட்டி கார்லயே இருக்கட்டும். காரைப் பூட்டி மாட்டுக் கொட்டாயில வுட்டுறுங்க.”

“என்ன இப்படி நடந்து போச்சு” லட்சுமண செட்டியார் மிகவும் வேதனைப்பட்டவராய் முகத்தை வைத்துக் கொண்டார்.

“எது?”

“நம்ம கதிரேசன் கல்யாணம் முடிச்சுட்டானாம்ல. அதுவும் உங்க ஊரு பொண்ணாமில்லை.. உங்க உறவுக்காரங்களாமில்லே. ஆச்சி விசாரிச்சுட்டு வரச் சொல்லிச்சு. அங்க மதுரையில ஆளுக்கு ஆள் வாய்க்கு வந்தபடி பேசறாங்க. நான்தான் ஒரு அதட்டு போட்டு எல்லாரையும் அடக்கிட்டு வந்தேன். பகவதிக்கும் இதுக்கும் சம்பந்தமில்லைன்னு சொல்லிட்டு வந்தேன்.”

“அது எப்படி சம்பந்தமில்லாம போய்டும்? அவன் நல்லவனாயிருந்தாலும், கெட்டவனாயிருந்தாலும் என் புள்ளைதானே. புள்ளை துடிப்பானவன். மிடுக்கா பொண்ணு பார்த்ததும் தொட்டுட்டான். தொட்டது தப்பில்லை. தொட்ட பொண்ணை என்னப் பண்ணப் போறான்றதுதான் கேள்வி. அதைப் பொறுத்துதான் அவனுக்கு மரியாதை. அதனால

# மங்கையர் மலர்

அக்டோபர் '95

## தீபாவளிச் சிறப்பிதழ்

❖ தீபாவளிக்கென ஸ்பெஷல் பட்சணங்கள்; ஸ்பெஷல் யோசனைகள்!



❖ பெண்கள் 'ஷாப்பிங்' எப்படி?

– அலசல்

❖ 'பொன்'னான தீபாவளி!

❖ உலகம் போற்றும் வீராங்கனை.

❖ புதிய விதி செய்யப் புறப்படுவோம்!

❖ அம்மாபிள்ளை

–அனுராதாரமணன் குறுநாவல்

*160+96 பக்கங்கள்!*


ஏற்படப் போற விளைவுகளை அவன் எப்படி சமாளிக்கப் போறான்றதை பொறுத்துதான் அவன் எதிர்காலம்."

"ஆம்பளை அலைவான். பொம்பளைக்கு புத்தியிருக்கனுமில்லை?" லட்சுமண செட்டியார் பகவதியைக் குற்றம் சொல்லும் நோக்கில் பேசினார்.

"சின்ன மரியாதை கொடுத்தாக் கூட பொம்பளை மயங்கிடும். எல்லாத்துக்கும் சரின்னும் ஆம்பளைதான் யோசிக்கனும். இவ நமக்கு சரியா... இவளை வைச்சு ஆள முடியுமான்னு உள்ள எடைப் போட்டு பார்க்கனும். சில பொம்பளைங்களை தொடறது நாகப் பாம்பைத் தொடறா மாதிரி. தொட்ட நேரமே சுருண்டு போகும்படியா ஆயிடும். அதனால தான் நான் பார்த்து நட்சத்திரம் பார்த்து, கல்யாணம் பண்றது. ஆண் குதிரைக்கு பெண் புலியைக் கல்யாணம் பண்ணி வைச்சா என்னாகும் கதி..."

"யார் குதிரை, யார் புலி?" லட்சுமண செட்டியார் திகைத்தார்.

"ஒரு பேச்சுக்கு சொல்றேங்க. ஆச்சி வேற என்ன சொன்னாங்க? எப்ப வராங்களாம்?" 'வந்த விஷயத்தை சொல்' என்பதைப் போல் துரிதப்படுத்தினாள்.

"ஆச்சி ரொம்ப அழுதிச்சு" லட்சுமண செட்டியார் பொய் சொல்லத் துவங்கினார். "வாய் விட்டு புலம்பல்தான். விநாயகம், நான் கொஞ்சம் தனியா பேசனும். நீ கொஞ்சம் தள்ளிப் போ" கூட வந்தவனை விரட்டினார். அவன் இளித்துக் கொண்டு நகர்ந்தான். அவன் சிரிப்பு பகவதிக்கு அச்சத்தைக் கொடுத்தது. வீச்சரிவாள் எங்கிருக்கிறது என்று ஒருமுறை ஞாபகப்படுத்திக் கொண்டாள்.

"செட்டியார் உயிரோட இருந்தா இப்படி நடந்திருக்குமா... அனாதையா போயிட்டமே அப்படின்னு அழுதாக, ரொம்ப பெருங்குர லெடுத்து அழுதாக" அவர் சொல்லச் சொல்ல பகவதிக்கும் அழுகை வந்தது.

"சுத்துப்பட்டுல இருக்கிற உறவு உன்னைத் தான் குறை சொல்லிச்சு. நான் சத்தம் போட்டு அடக்கிட்டேன். நீதான் பொண்ணு காட்டி மயக்கிட்டதா ஒரு சந்தேகம். சொத்து உன் பேர்ல இல்லைன்றதால தந்திரமா செய்துட் டன்னு சொல்றாங்க. நான் நம்பலை."

"ஏன் நம்புங்களேன். நான்தான் அப்படி செய்தேன்னு நீங்களும் சொல்லுங்களேன். நான் நாகர்கோயில் பொண்ணு. மலையாளத் துக் காரி. பொண்ணு விவகாரம்னு வந்துட்டா எந்த நிலைக்கும் போறதுக்கு பயப்பட மாட் டேன். ஆச்சி என்ன சொன்னாங்க, எப்ப வராங்களாம்?"

"ஆச்சி வரா மாதிரியில்லை. அவங்க இடிஞ்சி போயிருக்காங்க. நல்ல வார்த்தை சொல்லி பையனை மட்டும் கூட்டியாந்துரு அப்படின்னாங்க."

"எனக்கென்ன சேதி சொன்னாங்க?"

பகவதி அவரைக் கூர்ந்து பார்த்தாள்.

"ஒரு சேதியும் சொல்லலை. ஆச்சிக்கு உம் மேல கொஞ்சம் சந்தேகம்."

அவளுக்கு அவர் மீது சந்தேகமாக இருந்தது. அவரை நம்பக்கூடாது என்று முடிவு செய்தாள்.

"தப்பு நாச்சியப்பன் பேர்ல... உனக்குன்னு அவன் எதாவது செய்திருக்கணும். உன்னை வெறுமே அனுபவிச்சுட்டு செத்துப் போயிட்டான். சொத்து பத்து இல்லாதவங்களுக்கு ஏதாவது மதிப்புண்டா, மரியாதை உண்டா? உனக்கு சாமர்த்தியம் போறலை. நாலைஞ்சு வெத்து பேப்பர்ல நீ கையெழுத்து வாங்கி வைச்சுருந்தா இன்னிக்கு நீ கண்ணுல விரலைக் கொடுத்து ஆட்லாமில்ல?"

"யார் கண்ணுல?"

"எதிராளி கண்ணுல."

"உங்களுக்கு கண்ணு இருக்கு. என் கையில விரல் இருக்கு. இதுல பேப்பர் எதுக்கு, கையெழுத்து எதுக்கு"

அவர் திகைத்து, சிரிப்பாக்கிக் கொண்டார்.

"உனக்கு எப்பவுமே தமாஷ்தான்" என்று அவள் புறங்கையை தொடப் போனார். அவள் விலகிக் கொண்டு அவரை வெறித்துப் பார்த்தாள்.

"நாச்சியப்பன் தப்பு பண்ணிட்டான். நான் அதை சரிபண்றேன். இனி என் பேர்ல நான் சொத்து வாங்க முடியாது. ஏற்கெனவே நான் சூப்பர் டாக்ஸ். இன்னும் சொத்து வாங்கினா பிரச்னை வரும். அதுனால பத்து பதினைஞ்சு நான் தங்கி, உன் பேர்ல காப்பி எஸ்டேட்டோ, ஏலக்காய் எஸ்டேட்டோ வாங்கப் போறேன். என் எஸ்டேட்டை நீ பாத்துக்க. அதுக்கு மாசா மாசம் காசு தரேன். எனக்கும் வயசாயிடுச்சு. தேவகோட்டையில, மதுரையில இருக்கிற சொத்தை பசங்களுக்குக் கொடுத்துட்டு, நல்ல ரொக்கத்தோட இங்க வந்து தங்கிடுவேன். நாம ரெண்டு பேரும் சேர்ந்தே எஸ்டேட்டை கவனிக்கக்கலாம். ஆளுக்குப் பாதி வாபம் பிரிச்சுக்கலாம்" ரொம்ப நிதானமாய், பிரியமாய் லட்சுமணசெட்டியார் பேசினார்.

இதில் ஒரு சொல் கூடத் தவறு இல்லை. ஆனால் மொத்த எண்ணமும் தவறு. அளவுக்கு மிஞ்சின தந்திரமுள்ள ஆண்தான் இப்படிப் பேச முடியும். இந்தப் பேச்சுக்கு கோபப்பட முடியாது. அதே சமயம் இவன் எண்ணத்தை வளரவிடவும் கூடாது.

"எனக்கெதுக்கு இனி எஸ்டேட்டும் ஏலக்காயும்? ஆச்சி வந்தாங்கன்னா அவங்களைப் பார்த்துட்டு நான் நாகர்கோவில் போய்டுவேன்."

அவர் எழுந்து அருகே வந்தார்.

"நீ நொந்து போயப் பேசற. நான் இருக்கிற வரைக்கும் நீ எந்தக் கவலையும்பட வேணாம். நீ சரின்னு சொல்லு. நான் உன்னை உச்சாணிக் கொம்புல போய் வைக்கிறேன்."

"எதுக்கு சரின்னு சொல்லணும். நீங்க எம்பேர்ல எஸ்டேட் வாங்குறதையா?"

"எல்லாத்துக்குந்தேன்."

"எல்லாத்துக்கும்னா?"

"பராமரிப்பு, போக்குவரத்து, பாதுகாப்பு... ஏன், நான் அப்பப்போ வந்து சாப்பிட்டு போறேனே அந்த செலவு கூட நீ கணக்கு பண்ணிக்கலாம்."

இன்னமும் கூட வார்த்தை பிறழவில்லை. 'இப்படிப் பேசினாயா' என்று கேட்டால் 'ஆம் பேசினேன். அதற்கு வேறு எந்த அர்த்தமும் இல்லை' என்று சொல்ல முடியும். இப்படிப் பட்டவர்களோடு சுற்றி வளைக்காமல் நேரடியாய் மோதுவதுதான் உத்தமம்.

"என்னை வைச்சுக்கறேன்னு சொல்றீங்களா?" தேங்காய் சிதறியது போல் பகவதி கேட்டாள்.

"சேச்சே அப்படி சொல்லலை."

சிதறிய தேங்காய் ஒட்ட மறுத்தது.

"எனக்கு எஸ்டேட் எழுதி வைச்சுட்டு, நீங்க வரப் போக இருந்தா என்ன அர்த்தம்? ஊர் நம்மள அண்ணன் தங்கச்சின்னா சொல்லும்."

"நாச்சியப்பன் வரலையா, போகலையா?" லட்சுமணசெட்டியார் கண்களில் ஆசை வழிந்தது.

"அவர் எனக்கு புருஷன்."

"நானும் உன்னை சந்தோஷமா வைச்சுக்க முடியும்."

"எழுந்து போடா பொறுக்கி நாயே."

"ஏய், நீ கூத்திதானடி. ஒரு செட்டியாருக்கு சந்தோஷத்துக்கு வந்தவதானே. சீர்சினத்தி, மானம், மரியாதை எதாவது உண்டா உனக்கு. புருஷன்றியே. உன் புருஷன் செத்த போது உன் உறவு வந்ததா. முக்காடு போட்டுனுதானே வந்தே. மூணு நிமிஷம்தானே நின்னே. உன் புருஷன் செத்ததுக்கு உன்னை யாராவது துக்கம் கேட்டாங்களாடி. அய்யோ, பாவம்னு யாராவது ஒருத்தன் சொன்னாங்களா? சொல்ற இடத்துல நீ இல்லை. சொல் ஜாதியில நீ பொறக்கலை. நீ என்ன கண்ணகியா? தொட்டா சபிச்சுடுவீங்களா?"

அவர் எட்டி அவள் நெஞ்சைத் தொட்டார். அவள் அதிர்ந்து போனாள். வீறிட்டுக் கத்தினாள். அவரை நெட்டி நிலைகுலையும்படி தள்ளிவிட்டு உள்ளே போய் வீச்சரிவாளை எடுத்து வந்தாள். விலகியிருந்த விநாயகம் ஓடி வந்தான்.

"தயவுசெய்து கத்தி காரியத்தைக் கெடுத்து றாதீங்கம்மா. அவர் சொன்ன பதினைஞ்சு லட்சம் முன்பணம். ஏலக்காய்ல அறுபது, எழுபது லட்சம் போடத் தயாராயிருக்கார். உங்களுக்கு துணையா நான் இருக்கிறேன். ஆளுங்கள மேய்க்கற பொறுப்பை என்கிட்ட கொடுங்க. நீங்க வெறும் மேற்பார்வை பாருங்க. வலிய வந்த சீதேவியை எட்டி உதைக்காதீங்க. அருவாளக் கொண்டாங்க" விநாயகம் பிடுங்க முயற்சித்த போது அவள் மறுபடி ஓங்கினாள்.

ஒரு உஷ்ணத்தால், ஒரு கவலையால் ஒரு

அதிர்ச்சியால் உச்சக்கச்ச படபடப்பால் உள்ளிருந்து பொங்கிய மன வேதனையால் பகவதியின் உடம்பில் சில மாறுதல்கள் ஏற்பட்டன.

'கடவுளே, கடவுளே, கடவுளே என்னை ஏன் கைவிட்டாய்?... எதனால் என்னை இந்த இழிநிலைக்குக் கொண்டு வந்தீர்..' என்று சொல்லில்லாத மவுனம் ஒன்று கதறியது. இந்த நிலைக்கு பதிலாய் நான் செத்து ஒழிவது உத்தமம் என்கிற திடமான எண்ணம் வந்தது. உள்ளுக்குள்ளிருந்த உயிரை எச்சில் துப்புவது போல வெளியே விசி விடுகிற ஆவேசம் வந்தது. உயிர், உடம்பு, விடுதலை, இவை எல்லாவற்றையும் நினைக்கின்ற நிலை, இவைகளைத் தெரிந்த நிலை, இவைகளை தனித்தனியாகவும், ஒன்றாகவும் பார்க்கிற அமைதி அவளுக்குள் ஏற்பட, வெளியே உள்ள சக்தி ஒன்று அவளுக்குள் வேகமாய் உள்ளே புகுந்தது. அந்த சக்தியின் புகுதலை தாங்காமல் அவள் தள்ளாடினாள். விழிகளை விரித்து வினோதமாகச் சிரித்தாள்.

"ஆமாண்டா. நான் கண்ணகி, எல்லைக் காளி, மலையாள பகவதி, சோட்டானிக் கரை அம்மா.. .சமயபுரம் மாரியம்மா, மதுரை மீனாட்சி. எம்மூஞ்சியில இவங்க எல்லாரையும் பார்ப்படா. இனி எந்த கோயிலுக்குப் போனாலும் எம்மூஞ்சியைப் பார்ப்படா. என் நெஞ்சு தொட்ட உன் விரல் கருங்கும். எல்லா ஜென்மத்திலும் உனக்கு குஷ்டம் வரும். போ, இந்த மலையை உட்டுட்டுப் போ" அவள் உரக்கக் கத்தினாள்.

தடேரென்று சப்தமெழ உட்கார்ந்தாள். அரிவாள் பிடியை தரையில் அடித்து நிறுத்தினாள். ஒன்றரை அங்குலம் விட்டமுடைய அந்த அரிவாள் எந்தப் பிடிப்புமில்லாமல் நெட்டுக்குத்தலாய் நின்றது. பகவதி கண்களை மூடிக் கொண்டாள். மிகப் பெரிய ரீங்காரம் அவளைச் சூழ்ந்து கொண்டது. மிகப் பெரிய ஆழத்துக்குள், சொல்ல முடியாத விரைவில் அவள் பயணப்படத் துவங்கினாள்.

சில சமயம், சிலருக்கு சில நொடிகளில் இந்த வித தரிசனம் கிடைத்து விடுகிறது.

இது என்ன, எதனால், இது என்ன ஆகும் என்பதை அனுபவம் கொள்கிறவரால் பரிமாற முடியாது.

**"எந்த சினிமாவுக்குப் போனீங்கன்னு கேட்டா, பாரதிராஜாபடமுன்னு, நேரடியா சொல்லக் கூடாதா? இப்படி, ரெண்டு பாக்கெட்லயும் கையைவிட்டுகிட்டு மோட்டு வளையை, பார்த்துக்கிட்டு, கிழக்கு மேற்கா நடக்கணுமா?"**

**-ஆர். வசந்தகுமார்**



லட்சுமணசெட்டியார் பயந்து பின் வாங்குகிற வேளையில் விநாயகம் மிருகம் போல ஒரு காரியம் செய்தான்.

"செட்டியாரே இந்தப் பொம்பளை பயந்து உட்கார்ந்துடுச்சு. நீங்க மல்லாத்திப் போடுங்க. வாங்க."

பகவதியின் மேல் சேலையைக் கிழித்து தரையில் போட்டான். லட்சுமணசெட்டியார் முகம் திருப்பிக் கொண்டார். வெளியே வந்தார். ஸ்டியரிங் ஒடித்து திருப்பினார். அவரது வலது கை விரல்கள் வலிக்கத் துவங்கின.

விநாயகம் என்ன செய்வது என்று தெரியாமல் ஹால் தாண்டி அறைக்குள் எட்டிப் பார்த்தான். இரும்பு பீரோ தெரிந்தது. கொத்து சாவி அதில் சொருகப்பட்டிருந்தது. போய் பீரோவைத் திறந்து, அதிலிருந்த பணக் கற்றைகளையும், நகைகளையும், ஏலக்காய் பறிக்கும் பக்கெட்டில் போட்டுக் கொண்டான். கொல்லை வழியே காட்டுக்குள் நடந்தான்.

பகவதிக்கு அவன் செய்கைகள் யாவும் மனசில் தெரிந்தன. 'என்னுள் புகுந்த சக்தி வலிமையுள்ளது. அது எங்கும் நிறைந்தது. எல்லா நேரமும் விழிப்போடிருப்பது அது அந்த விநாயகத்தை கவனித்துக் கொள்ளும்' என்று மவுனமாய் இருந்தாள்.

நேதாக்கமார் என்கிற தொழிற்சங்கத் தலைவர்கள் கதிரேசனை டீக்கடையில் சந்தித்தார்கள். அலுவலகத்திற்கு வரும்படி அழைத்தார்கள். சங்கத்தின் ஆண்டு விழாச் செலவுக்காக கதிரேசன் ஐந்தாயிரம் ரூபாய் நன்கொடை அளித்தான். அவர்கள் அவனுக்கு கட்டான் காப்பி வரவழைத்துக் கொடுத்தார்கள். நாராயணனுக்கு உட்கார ஸ்டூல் கொடுத்தார்கள்.

"காப்பி வித்துடப் போறேங்க. ஏலம் வாங்கப் போறேன். எம்பேர்ல ஏற்கெனவே நிலம் இருக் கிறதனால பினாமி பேர்ல நிலம் வாங்கப் போறேன். சம்பளம் அதிகமாக்கினால் அது சாராயக் கடைக்குத்தான் போகுது. ஒரு நாளைக்கு மூணு ரூபா கூலி கூடுதலா தரேன். அந்தக் கூலியோடு நூறு ரூபாய் கூட போட்டுத் தரேன். அந்தக் காசை ஒரு கூப்பனா தரேன். நம்ம வாத்தியார் ஆறுமுகம், டீச்சர் ஜெயந்தி இவங்ககிட்ட அந்தக் கூப்பனைக் கொடுத்தா துணி மணிங்க தருவாங்க. சட்டையோ புடைவையோ, வேட்டியோ, கம்பளியோ, அங்க வாங்கிக்கலாம். அவங்க குறைஞ்ச விலைக்கு நல்ல சரக்கா கொடுப்பாங்க. நீங்க பேசி முடிவு சொல்லுங்க"

அவர்கள் கலந்து பேசி 'சரி' என்றார்கள்.

ஆறுமுகமும் ஜெயந்தியும் சந்தோஷத்தில் துள்ளிக் குதித்தார்கள். நாச்சியப்ப செட்டியாரின் நகையை விநாயகம் விற்கிறான் என்கிற தகவல் யூனியன் ஆள் கொண்டு வர, நாராயணனும் கதிரேசனும் எஸ்டேட் நோக்கி நடந்தார்கள்.

(தொடரும்)



1995 அக்டோபர் 1
யுவ புரட்டாசி 14
மலர் : 54
இதழ் : 9

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## சந்திராசாமியின் அரசியல் சதுரங்கம்!

சந்திராசாமியைக் கைது செய்ய வேண்டும் என்று ராஜேஷ் பைலட் அதிரடி உத்தரவு பிறப்பித்த கையோடு, அமைச்சரின் 'பதவி இறக்கம்' அறிவிக்கப்பட்டது.

தமக்கு நேரப் போகிற 'கதி'யைப் பற்றி அறிந்தே இப்படியொரு உத்தரவை பைலட் பிறப்பித்தார் என்பது இன்று ஊரறிந்த ரகசியம்.

பைலட்டின் உத்தரவை அரசாங்கம் மாற்றவோ ரத்து செய்யவோ முடியாத சூழ் நிலை! அவ்வாறு செய்தால், சந்திராசாமியைப் பாதுகாக்க இந்த அரசு துடிக்கிறது என்பதைப் பகிரங்கமாக ஒப்புக் கொண்டதாகிவிடுமே! இதை உணர்ந்தே தந்திரமாகச் செயல்பட்டிருக்கிறார் ராஜேஷ் பைலட்.

இந்தச் சம்பவங்கள் நடப்பதற்குச் சில தினங்களுக்கு முன், காங்கிரஸின் சோனியா காந்தி பிரிவுக்கு நெருக்கமான தொழிலதிபர் லலித் சூரியின் இல்லத்திலும் ஆரிஃப் முகமதுகானின் வீட்டிலும் சி.பி.ஐ. ரெய்டுகள் நடந்தன. இந்த வேட்டைகளுக்கு மூலகாரணமானவர் சந்திராசாமிதான் என்கிற செய்தியும் வெளியாயிற்று.




ஆகக்கூடி இந்திய அரசியல், சந்திராசாமி போன்றவர்களால் இயக்கப்படும் பொம்மலாட்டமாக இருந்து வருகிறது!

ஒரு நாட்டின் பிரதமர் போன்று மிக உயரிய பதவிகளை வகிப்பவர்கள், அந்தப் பொறுப்பின் பாரமும் கவலைகளும் தாளாமல், ஆன்மிகத் தலைவர்களிடம் ஆறுதல் பெற முயல்வது இயல்புதான்.

இந்திரா காந்தி பிரதமராக இருந்த போது, காஞ்சி பரமாச்சாரியாரைத் தரிசித்து உரையாட முற்பட்ட சம்பவம் இப்போது நினைவு கூரத்தக்கது. அம்மையாரை ஏறத்தாழ ஒரு மணி நேரம் தியானத்தில் அமரச் செய்து விட்டு, தாம் மௌனமாக ஆசி வழங்கியபடி நின்று கொண்டிருந்தார் பெரியவர். ஒரு வார்த்தை கூடப் பரிமாறப்படாமல்

●

*துறவறத்துக்கான இலக்கணங்களைப் பறக்க விட்டுவிட்டு, ஆடம்பரத்தையும் அதிகாரத்தையும் புகழையும் ஒரு சாமியார் நாட ஆரம்பிக்கும் போது, அவரை இனம் கண்டுகொண்டு, நிராகரித்து ஒதுக்குவது தான் புத்திசாலித்தனம்.*

●




அந்தச் சந்திப்பு முடிந்தது.

ஓர் அரசியல்வாதி தம்மை நாடும் போது, ஒரு துறவி எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதற்கான முன்னுதாரணம் இச் சம்பவம்.

சொந்த வாழ்க்கையின் பிரச்னைகளுக்கு ஆறுதலும் பரிகாரமும் சொல்வது போல் சாமியார்கள் அரசியல் சிக்கல்களுக்கும் நிர்வாகப் பிரச்னைகளுக்கும் தீர்வு சொல்ல முற்படும் போதுதான் சந்திராசாமி பாணி விவகாரங்கள் வெடிக்கின்றன.

துறவறத்துக்கான இலக்கணங்களைப் பறக்க விட்டுவிட்டு, ஆடம்பரத்தையும் அதிகாரத்தையும் புகழையும் ஒரு சாமியார் நாட ஆரம்பிக்கும் போது, அவரை இனம் கண்டுகொண்டு, நிராகரித்து ஒதுக்குவதுதான் புத்திசாலித்தனம்.

மாறாக, அவரது வார்த்தை ஒத்தடங்களாலும் ஆசைகாட்டும் ஆரூடங்களாலும் கவரப்பட்டு, அவர் காலில் விழுந்து, அவரை வளையவரும் அரசியல்வாதிகள், ஆபத் தைத்தான் சந்திக்க வேண்டும்.

அந்த சுயநல சாமியார்களின் அரசியல் சூதுவாதுகளும் ஒருநாள் அம்பலத்துக்குத் தான் வரும்.

'அரசியல்வாதிகள், மதிப்பிற்கும் மரியாதைக்கும் உரிய, காலஞ்சென்ற துறவி களின் அறிவுரைகளைப் பின்பற்றி நடப்பதே சிறந்தது' என்று ராஜாஜி சொன்னார். அது மிதமிஞ்சிய எச்சரிக்கை உணர்வுடன் சொல்லப்பட்டது என்று ஒதுக்க முடியாத அளவுக்கு இன்று காரியங்கள் நடந்து கொண்டிருக்கின்றன.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 10 | 5000 | 60 | 3,00,000 | 600 | [illegible] | [illegible] |
| 11 | 10000 | 50 | 5,00,000 | 1000 | [illegible] | [illegible] |


சந்தாதாரர்களுக்கான பரிசு

1 2 3 4 5 6 7 8 9 10 11

மறைமுகப் பரிசு

அறிமுகப்படுத்துவோருக்கான பரிசு

1 2 3 4 5 6 7 8 9 10 11

ESWARI
GROUP OF COMPANIES

ECF ஈஸ்வரி சிட்பண்ட்ஸ் (பி) லிமிடெட்

தலைமை & நிர்வாக அலுவலகம்: 4, எல்டாம்ஸ் சாலை, ஆழ்வார்பேட்டை, சென்னை - 600 018. தொ.பே: 455349, 459557, 457583, 451300.
கிளை அலுவலகங்கள் (தொ.பே. எண்கள்): பாரிமுனை - 560767, தி.நகர் - 8259661, புரசைவாக்கம் - 5324937/5324940, குரோம்பேட்டை - 405845, திருவல்லிக்கேணி - 841187, நங்கநல்லூர் - 2345891, சாலிக்கிராமம் - 428650, அண்ணாநகர் - 6283921/6283922, அடையார் - 4916991, கோயம்புத்தூர் - 430411, மதுரை - 24916 பாண்டிச்சேரி - 31830 மற்றும் மயிலாப்பூர் 142, இராயப்பேட்டை ஹை ரோடு, சென்னை - 4.

உங்கள் வளர்ச்சி ஈஸ்வரியுடன் வளரட்டும்

LOTUS/95

# அற்புதம் நிகழ்த்தும் கற்பக விநாயகர்!

கொஞ்சம் பருமனாக இருக்கும் நபர் வேகமாக நடந்தாலேயே நமக்குச் சிரிப்பு வரும்... நாட்டியம் ஆடினால் யாருக்குத்தான் சிரிப்பு வராது! அப்படி சிரித்த ஒருவரைப் பார்த்து ஊரே சிரிக்கும்படி ஆன கதை ஒன்று உண்டு.

அன்று விநாயகப் பெருமானுக்கு ஏக குஷி. என்ன மகிழ்ச்சியோ தெரியவில்லை...! பருத்த உடம்பு என்று கூடப் பாராமல் ஆடத் தொடங்கி விட்டார். தொந்தி குலுங்க, துதிக்கை அசைய, திந்திமி என்று சந்தம் முழங்க, நர்த்தன விநாயகர் நாட்டியம் புரிந்தார். பார்க்கிற பலருக்கும் சிரிப்பு வந்தாலும் பெரிய இடத்துப் பிள்ளை என்று மனசுக்குள் பல் தெரிய சிரித்துக் கொண்டார்கள். ரொம்ப அழகானவன் என்று மண்டைக்கனம் பிடித்த சந்திரனுக்கோ சிரிப்பை அடக்க முடியவில்லை. அழகே உருவான தான் ஆடினால் அழகாக இருக்கும்! இந்தக் குண்டுக் குழந்தை ஆடுகிறதே என்று அட்டகாசமாகச் சிரித்து விட்டான்.

அவ்வளவுதான்... 'ஓகோ... அழகன் என்ற கர்வமா? அது அழியட்டும்' என்ற பாணியில் பிள்ளையார் சபிக்க, க்ஷய ரோகம் பிடித்த மாதிரி ஒவ்வொரு கலையாகக் குறைந்து, எலும்பும் தோலுமாக ஒளியிழந்து போனான் சந்திரன். அவனைப் பார்க்கவே அருவருப்புற்று யாருமே பார்க்காது ஒதுக்கினர். பிரமனிடம் போய் பரிதாபமாக அழுதான் சந்திரன். 'பெரிய மனது பண்ணி மன்னிக்க வேண்டும்!' என்று பிள்ளையாரிடமே சிபாரிசு செய்தார் பிரம்மா. எந்தத் தப்புக்கும் ஓரளவே தண்டனை வேண்டும். வருந்தினால் மன்னிப்பும் வேண்டுமல்லவா? இரக்கமே வடிவான பிள்ளையார் இளகினார்.

தண்டனையை வருடத்தில் சில நாட்கள் மட்டும் அனுபவிக்கட்டுமே என்று திருவுள்ளம் கொண்டு "வளர்பிறை சதுர்த்தியில் உன்னைக் காண்பவர்கள் வீண்பழி, துயர் அடைவார்கள். ஆனால் ஆவணி மாத வளர்பிறை சதுர்த்தியில் விரதம் இருந்து என்னை வணங்கினால் அத்துயர் விடுபட்டு ஆனந்தம் அடைவார்கள்" என்று நிபந்தனையோடு கூடிய நிந்தனை – மற்றும் வந்தனை – என்று தண்டனையை மாற்றினார் விநாயகர். 'உருவு கண்டு எள்ளாமை வேண்டும்' என்கிற உயரிய திருக்குறள் உண்மை இது!

இன்றைக்கும் விநாயகர் சதுர்த்தி அன்று இந்த விரதம் பெருமளவு அனுஷ்டிக்கப்படும் இடம் – தலம் – பிள்ளையார் பட்டி. "நாலாம் பிறை பார்த்தால் நாய்படாதபாடு" என்ற பழமொழி வருத்த, வீண்பழி நீங்க விரதம் இருக்கும் அன்பர்களால் நிரம்பி வழியும் நாள் விநாயகர் சதுர்த்தி நாள். அதிலும் பெண்கள் கூட்டம் அதிகம் என்கிறார்கள். வீண்பழி பெண்களுக்குத்தான் அதிகம் வருமோ?

அது மட்டும் அல்ல. பிள்ளைப் பேறு முதலிய சித்திகள் வேண்டி வரம் கொடுக்க, வள்ளலை வணங்குவதும் அன்றைய வழிபாட்டின் பெருநோக்கம். வளர்பிறை – தேய்பிறை இரு சதுர்த்திகளிலும் விரதம் இருப்பவர்களும் உண்டு. இப்படி விரதம் இருப்போர் ஆளுக்கு ஒரு குடம் வைத்து – குடத்துள் வெள்ளிப் பிள்ளையாரை விட்டு, நீர் நிரப்பி, பூசனை புரிவது தனிச் சிறப்பு. பிறகு குடத்து நீரைத் தமக்கு அபிஷேகம் செய்து கொள்ள, பழி பாவம் நீங்குகிறது. கனிந்த உளத்தோடும் நனைந்த உடையோடும் கற்பக விநாயகர் காலடி தொழுது, தீபாராதனை தரிசித்து கவலை குறைத்தோர் பற்பலர் இங்கு! அன்று பிரசாதம் மட்டுமே உணவு!

பிள்ளையார்பட்டி பிள்ளையாருக்கு என்று பிரத்யேகமான பெருமைகள் சில உண்டு! மலையிலேயே செதுக்கப்பட்ட மூர்த்தி இவர். பிள்ளையார் வழிபாட்டில் ஒரு வேடிக்

கையான வழக்கம் உண்டு. கோவில் கட்டி, பிரதிஷ்டை செய்ய வேண்டிய சிலையைச் செதுக்கிச் செய்யாமல் எங்கிருந்தாவது ஒதுக் கிக் கொண்டு வருவது சிலர் பழக்கம். ஆம்; எங்காவது பூசித்த மூர்த்தியை இரவோடு இர வாகத் திருடிக் கொண்டு வந்து பிரதிஷ்டை செய்தால் பலன் அதிகம் என்றொரு நம்பிக்கை உண்டு.

இதற்குக் காஞ்சி மகா சுவாமிகள் சுவை யான விளக்கம் சொல்வார்கள். 'இப்படி ஒரு நம்பிக்கை இருப்பதால், எங்கே நம் ஊர் பிள் ளையார் திருட்டுப் போய் விடுவாரோ என்று கண்ணும் கருத்துமாகக் கவனிப்பார்கள். அது



வும் நல்லதுதானே!' என்பார்.

வரலாற்று ரீதியாக ஒரு காரணம் உண்டு. சிறுத்தொண்டர், பரஞ்சோதி என்ற பெய ரோடு சேனாதிபதியாக இருந்த சமயம், வாதாபி சென்று நரசிம்ம பல்லவனுக்காகப் போர் புரிந்து வென்று, திரும்பும் போது அங் கிருந்த கணபதியைத் தமிழகம் கொண்டு வந் தார். வேறிடத்தில் இருந்து கொண்டு வரப் பட்ட கணபதி - என்பதே வழக்கமாக - இப்படியொரு விநோதம் ஏற்பட்டிருக்கலாம்.

ஆனால் பிள்ளையார் பட்டி கற்பக விநா யகரை யாரும் திருட முடியாது. மலையையே குடத்துகிற திருட்டுத்தனம் மலராது என்ற தைரியத்தில் மலையில் செதுக்கப்பட்ட மூர்த்தி நமது பிள்ளையார். இக் கோவில் ஆரம்ப காலத்தில் குடைவரைக்கோவில். பின் னர் அதை உள்ளடக்கி எடுத்துக் கட்டப்பட்ட பெருங்கோவில், ராஜகோபுரம், ஊருணி என்று

## சுகி சிவம்

கோவில் அமைப்பு பெருகி விட்டது!

இந்தப் பிள்ளையார்பட்டிப் பெருமானின் பெருமைகளைப் பட்டியல் போட முடியாது என்றாலும் கொஞ்சம் முயற்சி செய்வோமா?

1. மலையிலேயே செதுக்கப்பட்ட மாபெரும் திருமேனி உடையவர்.

2. இரண்டே கரங்களால் இன்னருள் காப் பவர்.




3. இடது கரத்தை இடையில் நாட்டிய பெருமிதத் தோற்றம் காட்டும் பெரியவர்.

4. அர்த்த பத்ம ஆசனம், என்று கால்களை மடித்து அமைத்து வயிற்றை ஆசனத்தில் படிய விடாதவர்.

5. தண்டனை வழங்கும் அங்கு பாசம் தரிப் பதை விடுத்த கருணை பொழியும் கற்பகக் களிறு!

6. துதிக்கையை வலம் சுழிய விட்டு வலம் புரி விநாயகர் என்று வாழ்த்தப் பெறுபவர்.

7. 'பூரணம் நானே' என்ற பொருளில் பூர ணம் பொதிந்த மோதகக் கையர்.

8. கையில் இனிப்புடன் காட்சி தருவது குழந்தைகள் வழக்கம். எனவே பாலகணபதி யாக விளங்கும் குழந்தைமனத்தர்.

**கொஞ்ச நாள் முன்பு – டெல்லியிலிருந்து கர்னாடகாவில் உள்ள பெல்காம் நகரில் ஒரு முகவரிக்கு ஒரு பதிவுத் தபால் அனுப்பப்பட்டது. தபால்துறை – ரொம்ப அக்கறையாக அதை பெல்ஜியத்துக்கு விமானத் தபாலில் அனுப்பி விட்டனர். அதிர்ஷ்டவசமாக பெல்ஜியம் அதிகாரிகள் பதிவு பார்சலை பத்திரமாக திருப்பி சரியான விலாசத்துக்கு அனுப்பி விட்டனர்!**

**– பார்கவி**

---

9. ஆண் ஆனை போல் ஒருபுறம் தந்தம் நீண்டும், பெண் ஆனை போல் இடப்புறம் தந்தம் குறுகியும் இறைமை, ஆண் பெண் கடந்த நிலைமை என்பதைப் புலப்படுத்துபவர்.

10. சடைமுடி, கங்கை, முக்கண், இளம் பிறை சுமந்து சிவபெருமானாகவே சிந்திக்கத்தக்கவர். இப்படி நூறு நூறு பெருமைகள் மிக்கவர்.

கோவில் நிர்வாகம் ஒரு லட்சிய அமைப்பு என்றாலும் தவறில்லை. "பிள்ளையார்பட்டியான திருவேட்பூணாடையார்" என்ற கோத்திரத்தவரான நகரத்தார் பராமரிப்பில் ஜம்ஜம்மென்று இருக்கிறார் கற்பக விநாயகர். ஊருணி, கோயில், நகரத்தார் விடுதி, நிர்வாகம் எல்லாமே வெகுஜோர் என்று பாராட்டலாம்!

பிள்ளையார்பட்டி பிள்ளையார் பெயர்கள் பத்து என்கிறார்கள். தேசிவிநாயகப் பிள்ளையார். அதாவது தேசு (ஒளி) உடையவர். கற்பக விருட்சம் போல் வரம் கொடுக்கும் கற்பகப் பிள்ளையார். மற்றும் கற்பக மூர்த்தி. மேலும் கற்பக விநாயகர். அது மட்டுமா? வரத கணபதி; கற்பகக் களிறு, கணேசன், கணேச புரேசன், மருதங்கூர் அரசு, மருதங்கூர் ஈசன் என்பவையும் அவரது பெயர்களே!

பிள்ளையாரே பெரும்புகழ் பெற்ற மூர்த்தி என்றாலும் மலையைக் குடைந்து அமைக்கப்பட்ட இந்தக் குடவரைக் கோவிலில் திருவீங்கைக்குடி மகாதேவர் என்று சிவனும், சிவகாமி என்று அம்மையும் விளங்குகின்றனர். எடுத்துக் கட்டப்பட்ட கற்கோவிலில் மருதங்குடிநாயனார் என்று சிவனும், வாடாமலர் மங்கை என்ற திருநாமத்தில் அம்பிகையும் அருள்கரக்கின்றனர்.

இந்தச் சிவாலயத்தில் மார்கழித் திருவாதிரை பெருவிழா. அன்று நடைபெறும் ஒரு சடங்கு சுவையானது. சிவகாம சுந்தரியாகிய அம்பிகையின் ஊடலைத் தீர்க்க, நடராஜர் தமது சொத்துக்களை அம்மைக்கு எழுதிக் கொடுக்கும் பிடிபாடு படிக்கப் பெறும். ஊடல் நீக்கம் என்பது கதை என்றாலும் அறுவடைக் காலமான மார்கழித் திருவாதிரை அன்று கோவிலின் நிலபுல சொத்து விவரம் மக்களுக்குத் தெரிவிக்கப்படுவதே இ[illegible]ாவின் நோக்கம். சொத்துக்களில் த[illegible]க்கக் கூடாது அல்லவா!

இந்தக் கோவில் கல்வெட்டுக்கள், ஊடல் நீக்க உவந்தளிக்கும் உரிமை விவரம், திருமண காலத்தில் நகரத்தார் எழுதும் இசை குடிமாணம் போன்ற விவரங்கள் அடங்கிய அழகிய நூலை கம்பன் அடிப்பொடி சா. கணேசன் அவர்கள் எழுதி உள்ளார்கள். மேலும் அவர்கள் 'தேசி விநாயகப் பிள்ளையார் ஒருபா ஒருபது' பாடி உள்ளார்கள். தமிழ்க் கடல் ராய. சொக்கலிங்கம் அவர்கள் வாடாமலர் மங்கை பதிகம், மருநீசர் பதிகம் பாடியதோடு, கற்பக விநாயகர் பதிற்றுப் பத்தந்தாதி பாடி வழங்கினார்கள்.

1600 ஆண்டுகட்கு முந்தைய, ஆறு அடி உயர ஆனைமுகத்து அண்ணலை அண்மைக் காலத்தில் பாடி வரம்பெற்ற கவியரசு கண்ணதாசன் அவர்கள்,

*'அற்புதக் கீர்த்தி வேண்டின்*
*ஆனந்த வாழ்க்கை வேண்டின்*
*நற்பொருள் குவிதல் வேண்டின்*
*நலமெலாம் பெருக வேண்டின்*
*கற்பக மூர்த்தி தெய்வக்*
*களஞ்சியம் இருக்கை சென்று*
*பொற்பதம் பணிந்து பாரீர்!*
*பொய்யில்லை கண்ட உண்மை''*

என்று பாடியுள்ளார்கள்.

தேவலோகத்தில் உள்ள கற்பக விருட்சம் கேட்டதெல்லாம் தரும். பொன், பொருள், புகழ், நலம் எல்லாம் தரும். ஆனால் ஒன்றை மட்டும் தராது! எது அது? 'உன்னையே தா!' என்றால் அது தன்னைத் தவிர எது வேண்டுமானாலும் தரும். நம் கற்பகப் பிள்ளையாரோ தன்னையே தருவார். அது மட்டுமா... அந்தக் கற்பக விருட்சம் அறிவற்றது. யாராவது தீமையைக் கேட்டால் அழிக்கின்ற தீமையும் தரும். இந்தக் கற்பகமோ தீமையைத் தாராது! அது விருட்சம். இது மூர்த்தி! சகல தெய்வங்களையும் தன்னுள் குவித்துள்ள தெய்வக் களஞ்சியம் என்கிறார் கவிஞர்.




# ராவுக்கு ஒரு யோசனை!

'மண்டை காய்ந்து போயிருச்சுங்க!' என்று பல பேர் புலம்பி கேள்விப்பட்ட நமக்கு, அதை உண்மையிலேயே அனுபவிக்கும் சந்தர்ப்பம் சமீபத்தில் வாய்த்தது.

தரங்கம்பாடிக்கு சோனியா வந்த போது அவரைப் பார்க்கவும், பேச்சைக் கேட்கவும் வந்தவர்களின் மண்டை உண்மையிலேயே காய்ந்துதான் போயிற்று. சரியான வெட்ட வெளி; ஆளை அடிக்கும் மொட்டை வெயில். மூன்று மணிக்குத் துவங்க இருந்த நிகழ்ச்சிக்குப் பனிரெண்டு மணிக்கே, ஆயிரத்தெட்டு சோதனைகளுக்குப் பிறகு மேடைக்கு முன் இருந்த பட்டியில் நிருபர்களையும் புகைப்படக் காரர்களையும் அடைத்து விட்டார்கள். பச்சைத் தண்ணீர் ஒரு துளி கூடக் கிடைக்காத நிலையில், படா பேஜார்!

தரங்கம்பாடி – பொறையார் சாலை சந்திப்பில் 13 அடி உயர ராஜீவ் சிலையைத் திறக்கவும் அதனருகில் ராஜீவ்புரம் என்ற குடியிருப்புப் பகுதிக்கு அடிக்கல் நாட்டவும் வந்திருந்தார் சோனியா. அவரை வரவழைத்தவர் பாராளுமன்ற உறுப்பினர் மணிசங்கர அய்யர். பள்ளத்திலும் மேட்டிலும் குதித்து பம்பரமாய்ச் செயல்பட்டுக் கொண்டிருந்தார் அவர்.

சும்மா சொல்லக் கூடாது. சாரி, சாரியாக மக்கள் கூட்டம் மைதானத்தை முற்றுகையிட்டுக் கொண்டே இருந்தது! சாலையில் இரு புறத்திலும் ஐ.எஸ்.ஐ. ஸ்பெஸிபிகேஷனில் செய்யப்பட்டதோ என்கிற அளவுக்குக் கச்சிதமான ராஜீவ் – சோனியா கட் அவுட்கள்.

இருபதடி உயர மேடை. பின்புறத்திலேயே ஹெலிகாப்டர் இறங்க வசதி. மணிசங்கர் அய்யர் கைக்கு ஸ்பெஷலாய் ஒரு குலுக்கல்! இந்த விழாவை சோனியாவை வைத்து ஏற்பாடு செய்யாமல் இருந்திருந்தால், தமிழக காங்கிரஸ் தலைவர்கள் அனைவரையும் ஒருசேரப் பார்த்திருக்க முடியாதே?

முதலில் வந்தவர் வாழப்பாடியார். வெயில் தாங்காமல் தலைப்பாகை கட்டிக் கொண்டது மட்டுமல்லாமல், பக்கத்திலிருந்த தண்டாயுத பாணிக்கும் தலையில் துண்டு போட்டார்! பல சவுக்குக் கட்டைகளையும், காக்கிச் சட்டைகளையும் தாண்டிக் கொண்டு வாழப்பாடியைச் சந்தித்தோம்.

"அகில இந்திய அளவில் காங்கிரஸ் ஒன்றுபட்டு சிறப்பாக இருக்க வேண்டுமென்றால் சோனியாஜி தலைவராக வர வேண்டும்" என்று மறுபடி வலியுறுத்தினார் வாழப்பாடியார்.

"மணிசங்கர், பிரமாதமாக ஏற்பாடு செய்திருக்கீங்க" என்று அவரை வாழப்பாடியார் பாராட்ட,

"எல்லாம் உங்க ஆசீர்வாதம்" என்றார் அவர் அடக்கமாக.



• மணிசங்கர அய்யர்

• வாழப்பாடி



• சிலை செய்த லத்திகா கட்



"ஆசி உண்டு; ஆனா வாதமெல்லாம் கிடையாது" என்று அந்த வெயிலிலும் கடித்தார் வாழப்பாடியார்.

பின்னர் குமரிஅனந்தன், எஸ்.ஆர்.பி., தங்கபாலு, கடைசியாக மூப்பனார் என்று எல்லோரும் வந்து சேர்ந்து கொள்ளவே, பிரமுகர்கள் வரிசை கலகலத்தது. (கின்னஸ் காட்சி!)

சரியாக 2.45க்கு சோனியா வந்த ஹெலிகாப்டர், தூசி கிளப்பிக் கொண்டு மேடையின் பின்புறம் இறங்கியது.

பான்பராக் கலரில் புடவை. கறுப்புப் புள்ளி பார்டர், அதே நிறத்தில் சோளி. உடன் அய்யரின் மனைவி சுனித் வர, சோனியா புழுதி அடங்கிய பிறகு ஹெலிகாப்டரில் இருந்து இறங்கினார். (பிரியங்கா ஏன் வரவில்லை?)

"சோனியா காந்தி வாழ்க" என்ற மக்களின் கோஷம். கடகடவென்று முக்கியப் பிரமுகர்களிடம் மாலைகளையும் பொன்னாடைகளையும் பெற்றுக் கொண்டு மேடைக்கு விரைந்தார்.

ராஜீவ் காந்தியின் சிலையை இந்தப் பின் தங்கிய பகுதியில், ஒரு மூலையில் உள்ள கிராமத்தில் திறக்க வேண்டிய அவசியமென்ன?

காரணத்தைச் சொன்னார் மணிசங்கர்.

"இந்தியாவை 21-ம் நூற்றாண்டுக்கு இட்டுச் செல்லும் வகையில் ராஜீவின் கனவுகளுக்கேற்ப, இந்தப் பிற்பட்ட பகுதி தொழில்மயமாகிறது. முதல் கட்டமாக, அமெரிக்க வாழ் தமிழர் சங்கர் ரமணி தமது நண்பர்களுடன் சேர்ந்து கொண்டு பக்கத்தில் உள்ள காரைக்காலில் 1500 கோடி செலவில் எண்ணெய் சுத்திகரிப்பு ஆலை துவங்குகிறார். இரண்டாவதாக, 1915-ல் மகாத்மா காந்தி பொறையாறு பகுதிக்கு வந்து சென்றிருக்கிறார். அவர் கால்பட்ட பூமி. இந்த முக்கியத்துவத்தின் அடிப்படையில்தான் ராஜீவ் சிலையை இங்கே திறக்கிறோம். தொழிற்சாலையின் குடியிருப்புப் பகுதியான 'ராஜீவ்புரம்' இங்கே அமைகிறது" (அய்யர் தமிழ் நன்றாகவே முன்னேறியிருக்கிறது).

பின்னால் பேச வந்த குமரிஅனந்தன், "கற்புக்கடம் பூண்ட பொற்புடைத் தெய்வம்" என்று சிலப்பதிகார வரிகளால் சோனியாவை வர்ணித்தார். நேரு குடும்பத்தின் நாட்டுப்பற்று, ராஜீவின் தியாகம் ஆகியவை பற்றி அனந்தன், குரலில் நெகிழ்வு கூட்டி ஏற்ற இறக்கமாகப் பேசிய போது தாய்க்குலங்களின் கண்களில் ஈனம் கட்டியிருக்கும்!

வெயிலில் மக்கள் படும் அவஸ்தையை உணர்ந்ததாலோ என்னவோ, நச்சென்று ஓரிரு வரியில் முடித்துக் கொண்டார் பாண்டி முதல்வர் வைத்தியலிங்கம் (வாழ்க!)

சோனியா காந்தியின் பேச்சை மொழி பெயர்த்தவர் பீட்டர் அல்போன்ஸ். திடமான மனிதர்தான். ஏன் அந்தத் தடுமாற்றம்? எட்டு காலம் போடுமளவுக்குப் பரபரப்பான விஷயம் எதுவும் சோனியாவின் பேச்சில் இல்லை.

வாழப்பாடி, மூப்பனார் பெயர்களை சோனியா குறிப்பிடவில்லை! மக்கள் கூட்டத்தின் பின்புறத்திலிருந்து ஒரு கும்பல் 'வாழப்பாடியாரைப் பேச விடு' என்று குரல் கொடுத்துக் கொண்டிருந்தது. (வாழப்பாடியார் அணி, ஆட்களைத் திரட்டி அசத்தியிருந்தது!)

1988 ஆகஸ்டில் தம் கணவர் ராஜீவோடு இந்தப் பகுதிக்கு வந்ததை நினைவுகூர்ந்த சோனியா,

"வைத்தீஸ்வரன் கோயில், நாகூர், வேளாங்கண்ணி ஆகிய தலங்கள் அமைந்துள்ள இந்தப் பகுதி மதச்சார்பின்மைக்கு எடுத்துக்காட்டு" என்று புகழ்ந்தார். பின்னர் மேடையிலிருந்த பொத்தானை அழுத்த, சுமார் ஒரு பர்லாங் தூரத்திலிருந்த ராஜீவ் சிலையைச் சுற்றியிருந்த ஸாட்டின் துணி தரைக்கு இறங்க, சிலை மக்கள் பார்வைக்கு வந்தது. மாலையை வீசி மக்களிடம் போடும் போஸில் மிகத் தத்ரூபமான சிலை. அந்தப் பிரதேசத்துக்கே தனி அழகைக் கொடுக்கிறது. இதை உருவாக்கிய சிற்பி – ஒரு பெண். பெயர் லத்திகா கட். லத்திகாவின் அப்பா, டூன் பள்ளியில் அய்யருக்கும் ராஜீவுக்கும் பயாலஜி ஆசிரியராக இருந்தாராம். விழா முடிந்தவுடன், சிலையின் பீடத்தைச் சுற்றிச் சுற்றி நின்று கொண்டு புகைப்படம் எடுத்துக் கொண்டார் லத்திகா. (வயது ஐம்பதின் 'ரைட்' சைடாக இருக்கலாம்)

இறுதியாக தேசிய கீதத்துடன் கூட்டம் முடிந்தது. வாய் விட்டுப் பாடினார் சோனியா! ஹெலிகாப்டர் உயரே ஐந்நூறு அடி கூடப் போயிருக்காது. 'வாழப்பாடி வாழ்க; தங்கபாலு வாழ்க; மூப்பனார் வாழ்க; குமரி வாழ்க' வென்று தொண்டர்களிடையே கோரஸாகக் கோஷ்டி கோஷம்!

ராவுக்கு ஒரு யோசனை : பேசாமல் சோனியாவை, த. நா. காங்கிரஸை மேற்பார்வையிடக் கேட்டுக் கொள்ளலாம் அவர். 'தனி ஆவர்த்தனங்கள்' பிறகு கட்டாயம் தவிர்க்கப் பட்டு விடும்!

— ப்ரியன்

படங்கள் : ராஜன்

அடேயப்பா இவ்வளவு அன்பளிப்புகளா!




உங்கள் முதலீடு 5 ஆண்டுகளில் இருமடங்கு ஆகிறது. (ரூ. 5000- ரூ. 10,000)

ரூ. 5000- ஸ்ரீராம் டிரஸ்டில் முதலீடு செய்தால் இரு மடங்காகிறது - (ரூ. 5000 - 10000)

நீங்கள் ஸ்ரீராம் டிரஸ்டில் ரூ. 5,000/- முதலீடு செய்தால் 5 ஆண்டுகளில் ரூ. 10,000/- ஆக திரும்பக் கிடைக்கிறது.

### அது மட்டுமா?

சேர்ந்தவுடன் ஸ்ரீசக்ரம் - அஷ்ட லட்சுமி திருவுருவம் ஐம்பொன் னாலான பதக்கம் (பூஜையில் வைப்பதற்கேற்றது. உங்கள் குடும்பத்தில் எல்லா வளமும் பெருகும்.) அன்பளிப்பு

### அமுதசுரபி 5 ஆண்டுகளுக்கு இலவசம்.

48 ஆண்டுகளாகச் சிறப்பாக நடைபெற்று வரும் இலக்கிய மாத இதழ் (இப்போதைய விலை ரூ. 8/- வருங்காலத்தில் கூடுதல் விலைக்கு விற்றாலும்) 5 ஆண்டு களுக்கு இலவசம்.

### அமுதசுரபி தீபாவளி மலர்

விலை மதிப்பற்ற பொக்கிஷமான அமுதசுரபி தீபாவளி மலர். (இந்த ஆண்டு தீபாவளி மலர் (இரட்டை

1. ஸ்ரீசக்ரம் - அஷ்டலட்சுமி பதக்கம்
2. அமுதசுரபி இதழ்
3. தீபாவளி மலர்
4. 1996 ஆம் ஆண்டு தினசரிக் காலண்டர்

மலர் விலை ரூ. 50. வருங் காலத்தில் கூடுதலாக விற்றாலும்) 5 ஆண்டுகளுக்கு இலவசமாக எம் செலவில் அனுப்பப்படும்.

### 1996 தினசரிக் காலண்டர்

1996 ஆம் ஆண்டு இராமர் பட்டாபிஷேக வண்ணப்பட தினசரிக் காலண்டர் அன்பளிப்பு.

31.10.95 க்குள் சேர்பவர் களுக்கே வண்ணக் காலண்டர் அன்பளிப்பாக அளிக்கப்படும்.





விவரங்களுக்கு:

## ஸ்ரீராம் டிரஸ்ட்

தபால் பை 5043,
145, லிங்கச் செட்டி தெரு,
சென்னை - 600 001
Ph.: 5228545, 510535

ஸ்ரீராம் செம்மையில் சேருங்கள் சீரும் சிறப்புமாய் வாழுங்கள்

முதல் உலக யுத்தம், இரண்டாவது உலக யுத்தம் இதெல்லாம் உண்மையாகவே நடந்ததாக ஆதாரங்கள் உள்ளன. அடுத்தது அமெரிக்கா–ஈராக் – குவைத், போஸ்னியா – செர்பியா, இஸ்ரேல் – லெபனான் போன்ற மேலை நாட்டு ஜன்மப்பகை சண்டைகளை BBCயிலும் பார்த்தாயிற்று. CNNனிலும் பார்த்தாயிற்று. மேலும் நம்ம ஊர் அரசியல்வாதிகள் வேஷ்டி கிழித்து, புடவை இழுத்துப் போட்ட சட்டசபை சண்டைகளை அடிக்கடி பேப்பரில் படித்து அலுத்தாகி விட்டது. இது தவிர மாமியார் – மாட்டுப் பெண் சண்டைகளை நேரில் பார்த்துக் கொண்டிருக்கிறோம். லேட்டஸ்டாக WWF சண்டைகளையும் பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

என்றைக்காவது ஒருநாள் இந்த பாம்பு - கீரிப்பிள்ளை சண்டையைப் பார்த்து விடமாட்டோமா என்ற ஆர்வம் மண்டையைப் பிளக்கிறது. 'சொல்லுவான், ஆனால் விட மாட்டான்' என்ற ஜெனரல் நாலெட்ஜ் எல்லோருக்கும் இருந்தாலும் ஏதோ ஒரு நப்பாசையுடன் காத்திருந்தோம். அந்தப் பாடம் செய்த பொம்மையில் பாம்பு ஒன்று கீரிப்பிள்ளையின் வயிற்றைச் சுற்றி மூன்று முறுக்கு முறுக்கிக் கொண்டு கீரியின் முகத்தை உக்கிரமாக முறைத்துக் கொண்டிருந்தது.

பதிலுக்குக் கீரியும் ரேபீஸ் நாய் முகபாவத்துடன் பாம்பை முறைத்துக் கொண்டிருந்தது. இந்த



மாதிரி கலைநயமான போஸில் சண்டை போடுமா? எதிர்பார்ப்பு ஜாஸ்தியாகியது.

'விடப் போகிறேன்' என்று சொல்லி நேரம் கடத்திக் கொண்டிருந்ததில் இன்னும் சில சந்தேகங்களை யோசித்தேன்.

இந்தச் சண்டையில் தீவிரம் இருக்குமா? இல்லாவிட்டால் Starல் வரும் WWFமாதிரி செல்லமாக அடிக்கப் பழக்கியிருப்பானா? மனித வட்டத்திற்குள் வெளியே ஓடாமல் சண்டை போடுமா? எது ஜெயிக்கும்? இங்கே வேடிக்கை பார்க்கிறவர்கள் எந்த கட்சி? எல்லோரும் கீரிப்பிள்ளை கட்சி தான். பாம்பைக் கண்டால் படையும் நடுங்குமே?



# கே. ரவிசங்கர்

நாகபஞ்சமி, நாகபிரதோஷம், நாகதோஷம், பாம்புப் பஞ்சாங்கம் என்று கடவுள் சம்பந்தப் பட்டிருந்தாலும் பாம்பு பயமான சமாசாரம் தான். ரொம்ப வருஷமாக எங்கள் ஸ்ரீ முஷ்ணம் நகர் பக்தர்கள் பாம்பு புற்றிற்குப் பக்தி சிரத்தையுடன் பால்வார்த்தார்கள்.

ஒருநாள் தன் பக்தர்களைப் பார்க்க கம்ப்யூட்டர் கர்சர் மாதிரி நாக்கைச் சிமிட்டிக் கொண்டு புற்றின் வெளியே பாம்பு தலை நீட்டியது.

'நாகராஜா' என்று அலறியடித்துக் கொண்டு பால் சொம்பு, பூக்கூடை எல்லாவற்றையும் போட்டு விட்டு ஓடினார்கள்.

'நாதர் முடி மேல் இருக்கும்' என்று பக்தியுடன் நின்று பாடுவதற்கு யாருக்கும் தைரிய மில்லை.

"எல்லாம் ஜோரா ஒரு வாட்டி கைத்தட்டுங்க"

சண்டையை பார்க்கப் போகும் சந்தோஷத்தில் நானும் இரண்டு தட்டு தட்டி விட்டு முன்னுக்கு வந்தேன். செப்பிடு



"அவர் ஒரு போலி எல்.ஐ.சி. ஏஜெண்ட்னு எப்படிச் சொல்ற?"

"டேக் இட் ஈஸி பாலிசி'யாவது போடுங்கன்னு நச்சரிச்சுட்டாரே!"

— ஜெ. கீதா



"வரவர சூதாட்ட மனப்பான்மை ஜாஸ்தியாகிட்டே போவுது...."

"எப்படி சொல்றீங்க?"

"பாருங்களேன், கல்யாண நலங்குல சுத்தி இருக்கிற கூட்டம், 'மாப்பிள்ளை ஜெயிக்கிறார், பத்து ரூபாய்... பெண் ஜெயிக்கிறா, பத்து ரூபாயின்னு 'பெட்' கட்டுது...!"

— ஆர். வசந்தகுமார்





"திருமண அழைப்பிதழ் கவருக்குள் புது பிளேடு ஒண்ணு இருக்கே?"

"திருமணம் எங்க பேட்டை பிக்பாக்கெட்டுகள் சங்கத் தலைவர் மகனுக்கு!"

— உ. ராஜாஜி



வித்தைக்காரன் உடுக்கடித்துக் கொண்டே என்னருகில் வந்தான்.

"இந்த சாரு மனசில ஏதோ சங்கடம் ரொம்ப நாளா உறுத்திட்டிருக்கு. ரெண்டாவது பொண்ணுக்குக் கல்யாணம் ஆவலை. பையன் கடல்தாண்டி போய்ப் படிப்பானா? இதுதான் கவலை. காரணம் இவரு மேல நெறைய திருஷ்டி விழுந்து காரியம் தடபடுது."

எல்லோரும் என்னையே நோக்க, நான் அவனைப் பார்த்து இளித்துக் கொண்டிருந்தேன். அவன் சொல்வதில் பாதி உண்மையிருந்தது. ஒத்துக் கொள்ள பிரெஸ்டீஜ் இடம் கொடுக்கவில்லை. செப்பிடு வித்தைக்காரன் ஒரு மண்டை ஓட்டை எடுத்தான். கன்னத்தில் டொக்கு விழுந்து இளித்துக் கொண்டிருந்தது. அதன் மண்டையில் எதையோ தூவினான். சற்றுப் புகை வந்தது.

நான் பயந்து போய் திருவிளையாடல் நாகேஷ் போல் வளைந்தேன்.

"மனசில கவலையில்லேன்னு இந்த மண்டை ஓட்டுல சத்தியம் பண்ணிச் சொல்லு..."

பட்டும் படாமலும் ஒரு தாமரை இலைத் தண்ணீர் இளிப்பு இளித்தேன். அவனும் ஒரு நமுட்டுச் சிரிப்பு சிரித்தான்.

"நீ மனசுல ஆமாம்ன்றது எனக்கு மட்டும் கேக்குது. என்னை சரியான சமயத்துல பாத்துட்ட! இந்த கயிற கட்டு. இந்த மையைப் படுக்கை கீழ வச்சுப் படு. தன லாபம், ஆயுள் விருத்தி, போஜன சௌக்கியம் எல்லாம் உண்டாகும்..."

பெண் கல்யாணம், பையன் கடல்தாண்டிப் போதல் பற்றி ஒன்றும் சொல்லவில்லையே. இதையெல்லாம் விட அடுத்து வரப் போகும் பாம்பு - கீரிப் பிள்ளைச் சண்டைதான் இப்போதைக்கு முக்கியமாகப்பட்டது.

"அப்புறம் இந்த லேகியம், தைலம் இதெல்லாம் மூணு வேளைக்குத் தேன் கலந்து பல்லுல படாத சாப்பிடணும்."

அவன் பாட்டுக்கு பேக் செய்ய ஆரம்பித்தான். இதெல்லாம் யாருக்கோ என்பது போல் வாட்சைப் பார்த்தேன். சரி, தட்டெடுக்கும் நேரம் வந்து விட்டது என ஒரு இரண்டு ரூபாய் நோட்டை எடுத்து அவனுடைய அழுக்குத் துண்டில் போட்டேன்.

என்னை உக்கிரமாக முறைத்தான்.

"நம்ம குருவ அவமானப்படுத்திட்ட. என்னோட குரு குட்டிசாத்தான் உன்னைப் புடிச்சிட்டான். ரத்தபேதி, வாந்தி வரும். உடம்புல இருக்கற திருஷ்டி நாடியெல்லாம் புடைச்சு எழுந்து சுத்திக்கும். மைப் போட்டு ஜடயோகம், ஸ்பதயோகம் தெரிஞ்சாத்தான் எடுக்க முடியும்" கோபமாக சொல்லி விட்டு உடுக்கடித்து ரெண்டு ரூபாயை எடுத்து மண்டை ஓட்டைச்



• நாடகத்தில் ஒரு காட்சி

# மேடையில் ஒரு டீ.வி. சீரியல்!

டீ.வி. என்கிற மந்திரக் கயிற்றால் கட்டிப் போடப்பட்டு விட்ட மக்களை நாடகம் பார்க்க ஈர்ப்பது எப்படி?

ஒரு புது முயற்சி செய்திருக்கிறார் பாம்பே கண்ணன். "உங்களுக்கு டீ.வி. தானே வேண்டும்? வாருங்கள், என் நாடகத்திலேயே நான் டீ.வி. பார்க்கிற பிரமையை உண்டாக்கு கிறேன்" என்று அழைக்கிறார் இவர்.

• கண்ணன்



இவரது லேட்டஸ்ட் மேடை நாடகம் 'ஷெர்லாக் ஷர்மாஜி'க்கு. மேடையில் இவர் போட்டிருக்கும் செட்டே பிரம்மாண்டமான டீ.வி. போல அமைந்துள்ளது! பெயர் See TV. நாடகம் தொடங்குமுன்பும், இடையிலும், 'நாடகத்தின் இந்தப் பகுதியை வழங்கியவர்கள்' என்று விளம்பரதாரர் பெயர்களை அறிவிக்கிறார். இடையிடையே விளம்பரங்கள் வருகின்றன. லாங்ஷாட், மிட் ஷாட், குளோஸப் என்று பிரித்துக் காட்ட மேடையிலேயே மூன்று தளங்களை அமைத்திருக்கிறார்!

நாடகத்தில் இரண்டு எபிஸோட். இரண்டுமே துப்பறியும் கதை. முதலாவது கொலை கதை; இரண்டாவது கடத்தல் கதை. இரண்டு கதைகளும் விறுவிறுப்பில் போட்டி போடுகின்றன.

**— கௌதம்**

---

சுற்றி ஏதோ மந்திரம் சொல்லி ஓதி என் பாக்கெட்டில் போட்டான்.

கூட்டத்தினர் என்னைப் பார்த்து பயத்தில் நழுவினார்கள். 'ஆமாம் போடா' என்று குண்டு தைரியப்படுத்திக் கொண்டு நானும் நழுவினேன். அவன் கூப்பிடுவது போல் குரல் கேட்டுக் கொண்டேயிருந்தது. பாக்கெட் ரொம்ப கனத்துப் போய் தொங்கி, குட்டிச்சாத்தான் உள்ளேயிருந்து என்னைப் பார்ப்பது போல் ஒரு பிரமை. எச்சில் துப்பிப் பார்த்தேன். ரத்தமில்லை.

இயல்பில் நான் அபார ஆஞ்சநேயர் பக்தன். எந்த வினையும் என்னை ஒன்றும் செய்துவிட முடியாது என்று ஒரு பக்கம் தோன்றியது. 'ஜெய் ஹனுமான்!' என்று மனசுக்குள் உரக்கக் கூவிக் கொண்டேன்.

ஆனால் அவன் ஒருவேளை என் 'வில்' பவரை விட அதிக பவர் உள்ளவனாக இருந்தால்?

இரவு தூக்கம் வரவில்லை. கை கால்கள் முறுக்கிக் கொள்ளாமல் இருக்க எல்லாவற்றையும் அகலமாக விரித்துக் கொண்டேன். சட்டையைக் கழற்றக் கூடவில்லை.

எதற்கு இப்படிப் பயந்து சாக வேண்டும்? பேசாமல் அம்பதோ, நூறோ கொடுத்து வாங்கியிருக்கலாம். ரெண்டு ரூபாயைக் கொடுத்து அவமானப்படுத்தியிருக்க வேண்டாம். வினை வைத்து விட்டான். ஏதோ நடக்கப் போகிறது. பயம் போவதாக இல்லை.

அவனிடம் மனசார மன்னிப்புக் கேட்டுக் கொண்டேன். நாளைக்கு அவனைப் பார்த்து கயிறு, மை, தைலம் சமாசாரங்களை வாங்கிக் கொள்ள வேண்டும். எவ்வளவு செலவானாலும் பரவாயில்லை. திருப்பதிக்கு வேண்டிக் கொள்வது போல வேண்டிக் கொண்டேன். என் மீது வினையிருந்தால் எடுத்து விட கெஞ்சிக் கேட்டுக் கொள்ள வேண்டும். அனுமாரை வேண்டிக் கொண்டு படுத்துத் தூங்கினேன்.

மறுநாள் காலையில் தலைக்குக் குளித்து விட்டு பக்தி சிரத்தையுடன் அவன் இடத்திற்கு ஓடினேன். இல்லை. வீட்டை விசாரித்துக் கொண்டு போனேன். வாசலில் கூட்டம். என்னவென்று கேட்டேன். அவன் பையன்தான் பேசினான்.

"செப்பிடு வித்த காட்டிட்டிருந்த எங்க நைனா செத்துட்டார். நைட்டு கை காலெல்லாம் வெட்டி இழுத்து ரத்த வாந்தி எடுத்தாரு!"

"காக்கா வலிப்பு வந்து செத்துட்டாரா?"

"இல்லீங்க. நேத்து வித்த காட்டும் போது யாரோ ஒரு ரீஜண்டான ஆசாமிய டமாஸா பயமுறுத்தியிருக்காரு. ஆனா அந்த ஆளு நெஜம்னு நெனச்சு அனுமார ஜபிச்சு எங்கப் பாவுக்கு வெள வச்சுட்டான். நான் அவனை சும்மா விட மாட்டேன். நிஜமாவே மறு வினை வக்கப் போறேன் சார்... எனக்கு அந்த வித்தை தெரியும்."

நான் தலைதெறிக்க ஓடிக் கொண்டிருந்தேன்.

● க. கிருஷ்ணமூர்த்தி, பெரியகிருஷ்ணாபுரம்.

? என்.டி..ஆர். மீண்டும் தம் இடத்தைப் பிடிப்பாரா?

! 'மீண்டும் அரசியலில் புகுவேன்' என்ற ரீதியிலான சிவபார்வதி குளுரைகளைக் கேட்கையில் நீங்கள் சொல்வது நடக்காது என்றே தோன்றுகிறது. அர்த்தநாரீஸ்வர கோலத்தைத் துறக்காதவரை என்.டி..ஆர். அரசியலில் வெற்றிக்கொடி நாட்டுவது சந்தேகம்.

● ஆர். ராமசுப்ரமணியன், வடவள்ளி. ❑

? தம் பக்கம் பலமில்லை என்று நன்கு தெரிந்தும், எதற்கெடுத்தாலும் உச்சநீதி மன்றத்தில் மேல் முறையீடு செய்யும் ஜெ.யின் அடாவடித்தனம் பற்றி...?

! தவறை ஒப்புக் கொள்ளும் பக்குவம் இல்லை என்பதுடன் கையூட்டுக்குப் பிரதியுபகாரமாகச் செய்யப்படும் தவறுகள் என்பதால், இறுதிவரை போராட வேண்டியிருக்கிறது. வரிப்பணமும் நீதிபதிகளின் பொன்னான நேரமும் அடியோடு வீண்!

● ஜி. செல்வராஜன், ரிஷிவந்தியம்.

? சந்திராசாமி மீது சி.பி.ஐ. விசாரணைக்கு உத்தரவு பிறப்பித்ததானது காங்கிரஸின் தேசப்பற்றை உணர்த்துவதற்கா...?

! சுயநலப்பற்று காரணமான உட்கட்சிப் பூசலை உணர்த்துவதற்கு!


• விக்கிரமாதித்தன் போல்...

# ரஜினி அரசியலுக்கு ஆதரவு கொடு

● புளியரை கணேசன், சென்னை - 30.

? 'ரஜினிகாந்துக்கு அரசியலைப் பற்றி என்ன தெரியும்?' என்று சு. சாமி கேட்டிருக்கிறாரே?

! அரசியல் அறிந்தவர்கள்தான் அதில் ஈடுபடலாம் என்ற சட்டம் எதுவும் நம் நாட்டில் கிடையாதே!

● கு. நாகராஜன், குருசாமிபாளையம்.

? 'ஜெ.' கோர்ட்டில் ஆஜராகாமல் இருக்க அனுமதி அளிக்கப்பட்டுள்ளது பற்றி...?

! தேவையான நேரத்தில், அழைக்கப்படும் போது ஆஜராக வேண்டும் என்பதே நீதிமன்ற உத்தரவு! கோர்ட்டில் ஆஜரா வதாலேயே ஒருவர் குற்றவாளி என்று லலிதா அலறிப் புடைத்துக் கொண்டு செய்ய வேண்டிய அவசியமே இல்லை தரலாம்.

● மா. பழனிசாமி, கோவை.

? ஒரு படப்பிடிப்பு முடிந்ததுமே அ போகும் ரஜினியால் மக்களோடு மக்க

! கடுமையான உழைப்புக்குப் பின் ஓ லையே. காடாறுமாதம், நாடாறுமாதம் நாடுதானே இது!

● சி. ராஜேந்திரன், சின்னசேலம்.

? 'இதய தெய்வம் ஜெயலலிதா இ அது உலகின் சிறந்த வல்லரசு நாடா கூறியிருக்கிறாரே?

! அமைச்சருக்கு அப்படியொரு பெ லணும்!

● விருதை மோகன், விருதாசலம்.

? உ.பி.யில் பெரியார் சிலை வைக்

! பெரியாரின் நாத்திகவாதம் வேறு; யாசப்படுத்திப் பார்க்கும் ஆழமான க எனவே அவர் சிலையைத் தீவிர மத முன்யோசனையுடன் தவிர்த்திருக்கல அரசு, பி.ஜே.பியை தர்மசங்கடத்தில்

● எம். சந்திரசேகர், மேட்டுமகாதானபு

? ரஜினி அரசியலில் குதித்தால் மு

! பின்னே, அவர் பிரபு வீட்டுச் சம்


• சந்தேகக் கேஸ்!


• சிலை சிக்கல்!





• பெயர் பொருத்தம்!



• விசாரணை ஏன்?



• சொல்லம்பு....



• ...பரிமாற்றம்

● மா. நளினி, திருச்சி - 8.

? *புரட்சி என்றால் என்ன?*

! நிச்சயமாக 'அம்மா' செய்வது அல்ல!

● கே.கே.வி. அகிலா, வேலூர் - 12.

? *சென்னையில் இலங்கை தூதரகத்தில் இருபத்து நாலு மணி நேரப் பாதுகாப்பையும் மீறி குண்டு வெடித்தது எதைக் குறிக்கிறது?*

! ஜெ. ஆட்சியில் விடுதலைப் புலிகளும் புலி ஆதரவாளர்களும் மிகவும் துணிந்து விட்டார்கள் என்பதை!

● ஸ்ரீநி, தாண்டாம்பாளையம்.

? *'ஜெ' ஒருவேளை பத்திரிகையாளர்களைச் சந்தித்தால் உங்களின் முதல் கேள்வி என்னவாயிருக்கும்?*

! டான்ஸி நில வழக்கு தொடர்பாக அவர் ராஜினாமா செய்வது நல்லது என உச்சநீதிமன்றம் சிபாரிசு செய்த பின்னரும் அவர் தொடர்ந்து பதவியில் ஒட்டிக் கொண்டிருப்பது ஏன்?

● ப. இராம்முருகன், சிவகங்கை.

? *'நான் இந்தியாவின் ஹிட்லராக இருக்க விரும்புகிறேன்' என்று பால்தாக்கரே சொல்லியிருக்கிறாரே...?*

! அவர் ஹிட்லராக இருக்க விரும்பலாம். ஆனால் மக்கள் ஹிட்லர் ஆட்சியை ஏற்க வேண்டுமே! இந்திரா காந்தி ஹிட்லர் ராஜ்ஜியம் நடத்த முயன்ற போது என்ன நடந்தது என்பது தெரியாதா...?

● சி. கெ. ரஜினிஅருள், மணக்காடு.

? *ஜெயின் கமிஷன் முன்பு சுவாமியும் ராம்ஜெத்மலானியும் படுமோசமாகத் திட்டிக் கொள்கிறார்களே?*

! விவாதத்திலிருந்து விலகிப் போய் கொஞ்சம் நேரத்தை வீணாக்கினாலும் அந்த சுவாரஸ்யமான சொல் அம்புப் பரிமாற்றங்களை ரசிக்காமல் இருக்க முடியவில்லை!

● செல்வ கௌதம், சென்னிமலை.

? *கொடைக்கானல் ஹோட்டலின் விதிமுறை மீறல் குறித்து, தமிழக முதல்வர் உச்சநீதி மன்றத்தில் சமர்ப்பித்த மனு தள்ளுபடியாகி விட்டதே?*

! முதல் குட்டு உயர்நீதிமன்றத்தில்; இரண்டாவது குட்டு உச்சநீதி மன்றத்தில்; மக்கள் மன்றத்தில் மூன்றாவது குட்டு காத்திருக்கிறது!

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
**ஆர். ராமசுப்ரமணியன், 'ராஜம்மாள் இல்லம்'**
**20, வி.என்.ஆர். நகர், வடவள்ளி அஞ்சல்,**
**கோவை - 641 041.**

## ...பேன் என்கிறாரே குஷ்பு?

...ால்லி விட முடியாது. எனவே ஜெய ...ராவிலிருந்து விலக்கு அளிக்க மனு ...ாராக, நீதிமன்றத்துக்கு ஒத்துழைப்புத்

...திலை நாடி இமயமலைச் சாரலுக்குப் ...க் கலந்து அரசியல் நடத்த முடியுமா? ...யும் அமைதியையும் நாடுவதில் தவறில் ...ு இருந்த விக்கிரமாதித்தன் அரசாண்ட

...ாவின் தலைமை ஏற்கும் போதுதான் ...ளரும்' என அமைச்சர் சத்தியமூர்த்தி

...வைச்சாங்களே... அவங்களைச் சொல்

...திர்ப்பு தோன்றியதே...?

...தறிவுவாதம் வேறு. இரண்டையும் வித்தி ...ணாட்டம் எளிய மக்களுக்கு இருக்காது. ...ர்வுகள் நிரம்பிய உ.பி.யில் நிறுவுவதை ... அப்படிச் செய்யத் தவறிய மாயாவதி ...த்தி விட்டது.

...தரவு கொடுப்பேன் என்கிறாரே குஷ்பு? ...லையா ஆதரிப்பார்?

# வாழ்வில் சில நேரங்களில் பணநெருக்கடி ஏற்படுவதுண்டு... ஆனால் மனமோ கடன் கேட்க வெறுத்திடும்.

## LINE OF CREDIT

*From*

**Ram Kaashyap**

**இதுவரை இல்லாத புதிய கருத்து முதன் முறையாய்!**

ராம் காஷ்யப் சீட்டில் அங்கத்தினராகுங்கள்... வித்தியாசத்தைக் கண்டறியுங்கள். கல்வி, திருமணம் மற்றும் அவசர மருத்துவச் செலவுகள்... எனும் அத்தியாவசியமான தேவைகளை எதிர்கொள்ள அமைக்கப்பட்டது தன்னிகரற்ற 'நெருக்கடிநிலை நிதியுதவி திட்டம்' (Line of Credit).

ராம் காஷ்யப்பின் கிளைகளுக்கு விரையுங்கள். இந்தப் புதிய 'நெருக்கடிநிலை நிதியுதவி திட்டத்தின்' ஆதாயத்தை அனுபவியுங்கள்.



டிசம்பர் 1995—க்குள் சேருபவர் மட்டுமே இத்திட்டத்தை பயன்படுத்திக் கொள்ளலாம்.



**Ram Kaashyap**

Chits Private Limited

(Member of Ram Kaashyap Group)

சுடில்லா சேமிப்பு. இணையற்ற தேர்வு

**பதிவு அலுவலகம்** : 53, பிஷப் கார்டன் (கிரீன்வேஸ் சாலை அருகில்), சென்னை - 600 028. போன் : 4936931, 4936932

**நிர்வாக அலுவலகம்** : I/I, சர் தேசிகா ரோடு, ஆழ்வார்பேட்டை சிக்னல் அருகில், மயிலாப்பூர், சென்னை - 600 004. போன் : 4994303

**கிளைகள்** : • **சென்னை** : • மயிலாப்பூர் : I/I, சர் தேசிகா ரோடு, (கீழ்த்தளம்), ஆழ்வார்பேட்டை சிக்னல் அருகில், மயிலாப்பூர், சென்னை - 600 004. போன் : 4994303 • மேற்கு மாம்பலம் : 1-A மூர்த்தி தெரு, முதல்மாடி, (அயோத்தியா மண்டபம் அருகில்), சென்னை - 600 033 • அண்ணா நகர் (கிழக்கு) : N.P.காம்ப்ளெக்ஸ், 102, 'D' பிளாக் (பேஸ்மெண்ட்), (சிந்தாமணி அருகில்), சென்னை - 600 102 • அடையாறு : லயா பிளாக், நெ.II, 2வது மெயின் ரோடு, காந்தி நகர், சென்னை - 600 020 • **கோயம்புத்தூர்** : 378, டாக்டர் நஞ்சப்பா ரோடு, ஏஷியாட்டிக் பில்டிங், 2வது மாடி, கோயம்புத்தூர் - 641 018. போன் 231886 • **திருச்சி** : 44-45, 3வது மாடி, அன்னை சிவகாமி காம்ப்ளெக்ஸ், சிங்காரத் தோப்பு (சூப்பர் பஜார்), திருச்சி - 620 008 • **தஞ்சாவூர்** : T.S. நெ.2547, தெற்கு மெயின் தெரு, தஞ்சாவூர் - 613 009 • **கும்பகோணம்** : V.A.O. காம்ப்ளெக்ஸ், 198, முதல் மாடி, பெரிய கடை வீதி, கும்பகோணம் - 612 001 • **மதுரை** : NCS பில்டிங், 2வது மாடி, 113-B, மேற்கு பெருமாள் மேஸ்திரி தெரு, மதுரை - 625 001 • **விஜயவாடா** : 29-9-30, விஷ்ணுவர்தன்ராவ் தெரு, சூர்யராவ்பேட், விஜயவாடா - 520 002. போன் 437861 • **ஹைதராபாத்** : 2வது மாடி, 16-11-741/B/B1 மூசாராம் பாக், தில் ஷாக் நகர், ஹைதராபாத் - 500 036 • 5-9-47/3, பஷீர்பாக், ஹைதராபாத் - 500 029. போன் 232962. • **செகந்திராபாத்** : 65, அலெக்ஸாண்டர் ரோடு, செகந்திராபாத் - 500 003 போன் 802212. விசாகப்பட்டிணம், ராஜமுந்திரி கிளைகள் விரைவில் எதிர்பாருங்கள்.

Insight 1194

• பிரும்மானந்த ரெட்டி

## மூன்றாவது கண் - 8



# பார்லிமெண்ட்டில் கலாட்டா!

சி. வி. நரசிம்மன்

பார்லிமென்ட் எப்படி இயங்குகிறது? சற்று விரிவாக இதுபற்றிக் கூறலாம் என்று நினைக்கிறேன். அது மிக அவசியமானதும் கூட! நாட்டின் தலைவிதி எழுதப்படும் இடம் அதுதானே!

*1974-76.*

மத்தியில் இந்திராகாந்தி ஆண்டு கொண்டிருந்த நேரம். உள்துறை அமைச்சரவையில் இணைச்செயலாளராக இருந்த நான், பார்லிமென்ட் கூடியிருக்கும் போது உள்துறை சம்பந்தப்பட்ட விஷயங்கள் வரும் எல்லா நாட்களிலும் அங்கு போக வேண்டி இருந்தது.

விவாதம் நடக்கிற சமயம், அஃபிஷியல் காலரியில் இருந்து கொண்டு, உள்துறை அமைச்சருக்குத் தேவையான விவரங்களை சிட்டு மூலம் அனுப்பிக் கொண்டிருக்க வேண்டும். குறிப்பாக பட்ஜெட் விவாதம் நடக்கிற காலங்களில் அங்கே இங்கே அசைய முடியாது! துல்லியமான புள்ளி விவரங்களை உடனுக்குடன் தருவதுடன் பழைய நிகழ்ச்சிகள், சம்பவங்கள், உதாரணங்கள், கணக்கு வழக்குகள் அனைத்தையும் விரல் நுனியில் வைத்திருக்க வேண்டும். எப்போது, யார் எந்தப் பிரச்னையை எழுப்புவார்கள் என்று எப்படித் தெரியும்?

கவனக்குறைவால் தவறான விவரங்கள் தந்து விட்டால் அவ்வளவுதான்! பிடித்து உலுக்கி விடுவார்கள். அமைச்சர்களை மடக்க ஏதாவது முடுக்கு, மூலை கிடைக்காதா என்று எதிர்க்கட்சியினர் கண்ணில் விளக்கெண்ணெய் ஊற்றிக் கொண்டு விழித்திருப்பார்கள்.

போதாக்குறைக்கு வி.ஐ.பிக்கள், உயர் அதிகாரிகள், நிருபர்கள், வெளிநாட்டுப் பிரதிநிதிகள், செய்தி நிறுவன ஏஜென்ட்கள் என்று பார்லிமென்ட் எப்போதும் ஒரு பரபரப்புடனே ஜொலித்துக் கொண்டிருக்கும்.

பார்லிமென்ட் நடவடிக்கைகளைப் பொறுத்தவரை, அரசுச் செயலாளர்களுக்கு அத்தனை சிக்கல் இல்லை. சம்பந்தப்பட்ட துறை அமைச்சரோடு கலந்து பேசி தகவல்களை முன்னதாகச் சேகரித்து அளிப்பது, கேள்விகளுக்கு பதில் தயாரிப்பதெல்லாம் இணைச் செயலாளர்தான்!

இதற்காக, பார்லிமென்ட் கூடுவதற்கு முன் நாள் மாலை, அல்லது அன்று அதிகாலை அமைச்சருடன் கலந்து பேசி, அன்று எழுப்பப்படப் போகிற பிரச்னைகள், கேள்விகள், பேச வேண்டியது என்ன, தர வேண்டிய விவரங்கள் என்ன என்பதைப் பற்றி முன்கூட்டியே தயார் செய்து கொண்டு விட வேண்டும்.

இதற்கு வசதியாக, எம்.பிக்கள் தம் கேள்விகளை முன்னதாகவே எழுதித் தந்து விடுவார்கள்.

இங்கே ஒரு சுவாரஸ்யமான விஷயம் குறிப்பிடத் தோன்றுகிறது. எத்தனையோ மாநிலங்களிலிருந்து எவ்வளவோ எம்.பிக்கள் வருகிறார்கள். ஒவ்வொருவருக்கும் கேட்பதற்கு நூறு கேள்விகள்; ஆயிரம் சந்தேகங்கள். ஆனால் பார்லிமென்ட்டில் 'கேள்வி நேரம்' என்று ஒதுக்கப்படுவது வெறும் ஒரு மணி நேரம்தான்! (பார்லிமென்ட் தொடங்கியதும் காலை 11லிருந்து 12 வரை.) அத்தனை கேள்விகளுக்கும் எப்படி பதில் சொல்வது?

மிகக் கஷ்டம். ஆகவே, ஒரு வழி செய்




"போலீஸ் ஸ்டேஷன்ல எதுக்கு கோஷம் போடறாங்க?"

"புது இன்ஸ்பெக்டர், பழைய மாமூல் பாக்கியெல்லாம் கெடுபிடியா வசூல் பண்ணச் சொல்றாராம்; பழசையெல்லாம் தள்ளுபடி பண்ணணும்னுதான் ஆர்ப்பாட்டம்!"

– சீர்காழி. வி. ரேவதி

வார்கள். எம்.பிக்கள் முன்னதாக எழுதித் தரும் கேள்விகளில் குலுக்கல் மூலம் ஒரு பதினைந்து, இருபது கேள்விகளைத் தேர்ந்தெடுப்பார்கள். (பிரச்னையே இல்லை!) அதிலிருந்து ஏழு – எட்டு கேள்விகளுக்கு மறுபடி குலுக்கல்! இந்த முறை தேர்வாகும் அந்த ஏழு – எட்டு கேள்விகளுக்கு அருகில் ஒரு 'ஸ்டார்' போடுவார்கள். 'Starred Questions' என்று சொல்லப்படும் இந்தக் கேள்விகளுக்குத்தான் அமைச்சர்கள் நேரடியாக பதில் சொல்ல வேண்டி இருக்கும். இவை தொடர்பான துணைக் கேள்விகளும் அனுமதிக்கப்படும்! மிச்சமுள்ள 'Unstarred' கேள்விகளுக்கான விளக்கங்களை எழுத்து மூலம் தந்து விட்டால் தீர்ந்தது பிரச்னை. இவற்றின் மேல், விவாதங்கள் ஏதும் அனுமதிக்கப்பட மாட்டாது!

இதில் இன்னொரு விஷயம் – சர்ச்சைக்குரிய கேள்வி 'Starred' கேள்விகளில் முதலாவதாக வந்து விட்டால் வேறு வினையே வேண்டாம்! அந்த ஒரு கேள்வியே அன்றைய கேள்வி நேரம் முழுவதையும் சாப்பிட்டு விடும்! மிச்சம் இருப்பவை, அந்தத் துறைக்கு அடுத்த 'turn' வரும்போதுதான்!

பார்லிமென்ட்டில் கலந்து கொள்வது எப்போதும் எனக்கு சுவாரஸ்யமான விஷயமாகவே இருந்தது. சவால் நிறைந்த அந்த அனுபவங்கள் எனக்குப் பல புதிய விஷயங்களைக் கற்றுத் தந்தன.

ஒருதரம் உள்துறை சம்பந்தமான கேள்வி நேரம் 'turn' வந்திருந்தது. பதில்கள் தயாரித்து, அமைச்சர் அனுமதியுடன் முன்னதாகவே அனுப்பி விட்டேன்.

மறுநாள் பார்லிமென்ட் கூட இருந்த சமயம், முன்நாள் இரவு நான் அனுப்பிய பதில்கள் 'பிரின்ட்' ஆகி என் பார்வைக்கு – வீட்டுக்கு வந்திருந்தன. அது வழக்கம்தான்.

மேலோட்டமாக, சரியாக வந்திருக்கிறதா என்று பார்த்துக் கொண்டே வந்தேன்.

பயங்கர ஷாக்!

ஒரு கேள்விக்கு – முற்றிலும் சம்பந்தமில்லாத – வேறொரு கேள்விக்கான பதில் இடம் பெற்றிருந்தது! அது 'Unstarred' கேள்விதான். இருந்தாலும் அத்தனை எம்.பிக்களும் அமைச்சர்களும் வி.ஐ.பிக்களும் படித்தால் என்ன ஆவது? உள்துறையின் மானம் கப்பலேறி விடாதா?

மாலை கடந்து, இரவாகி விட்ட சூழலில் எனக்குப் படபடப்பு அதிகமானது. விடிவதற்குள் மாற்றியாக வேண்டும்.

பார்லிமென்ட் அலுவலகத்துக்கு அந்த இரவே ஓடினேன். தூங்கிக் கொண்டிருந்த அலுவலர்களைத் தட்டி எழுப்பி விஷயத்தைச் சொல்லி, உடனே 'டைப்' ஆகி இருந்த அந்த 'பதில்' பிரதிகளை மாற்றச் சொல்லி, சரியான பதிலை மாற்றிச் சேர்த்து ஒருவழியாக வீடு திரும்ப –

பிறகுதான் மூச்சுவிட முடிந்தது!

பார்லிமென்ட்டைப் பொறுத்தவரை மிக முக்கியமான விஷயம், அரசின் சார்பாக ஒரு அமைச்சர் கொண்டு வரும் தீர்மானம் அல்லது ஒரு அறிவிப்பு, அத்தனை அங்கத்தினருக்கும் சரியான முறையில் போய்ச் சேருகிறதா, அவர்கள் ஒழுங்காகப் புரிந்து கொள்கிறார்களா என்பது.

இது நடவாத போதுதான் கூச்சல், குழப்பம், சண்டை, ரகளை எல்லாம்.

ஒரு சம்பவம் –

இப்போது நினைத்தாலும் அன்று நேர்ந்த அதே பரபரப்பு தொற்றிக் கொள்கிறது.

அது எமர்ஜென்ஸி அறிவிப்பதற்கு முந்தைய காலகட்டம்.

அஸ்ஸாம், மேகாலயா போன்ற வடகிழக்கு மாகாணங்களில் பிரிவினைவாதிகள் – தீவிரவாதிகளின் தொல்லை மிக அதிகமாக இருந்தது. அரசுக்கு எப்போதும் தலைவலி தந்து கொண்டிருந்த அவர்களை அடக்க, கைது செய்ய, அன்றைய 'மீசா' சட்டம் போதுமானதாக இல்லை. 'மீசா'வில் – அந்தப் பகுதிகளுக்கு மட்டும் பொருந்தும்படியான – சில திருத்தங்கள், சேர்க்கைகள் செய்தால் பாதுகாப்பு நடவடிக்கைகளுக்கு உதவியாக இருக்கும் என்று உள்துறை கருதியது. (எதற்காகக் கைது செய்கிறோம் என்று கைது செய்யப்படுபவர்களுக்குத் தெரிவிக்க சற்றுக் கூடுதல் கால அவகாசம் என்பது போன்ற சில மாற்றங்கள்.)

உள்துறை அமைச்சர் பிரும்மானந்த ரெட்டி, காபினெட்டில் இதற்கான மசோதாவைத் தாக்கல் செய்ய, காபினெட் ஏற்றுக்

WE ACCEPT FIXED DEPOSITS



# 24% P.A.

Phone :
4342098
4840150

## INCENTIVE 5% + 1 GRM GOLD COIN

வட்டி மற்றும் அசலுக்கு முன் தேதியிட்ட காசோலைகள் வழங்கப்படுகிறது.

✱ உங்கள் முதலீடு 3 வருடத்தில் இரண்டு மடங்கு ஆகிறது ✱ மூன்று வருடத்துக்கு ரூ.12,000 டெபாஸிட் செய்து, 2 வருடத்தில் 3 சவரன் தங்கம் பெறலாம் ✱ தவணையில் பண்ணை வீடு பெறலாம் ✱ சலுகை விலையில் சித்திர ராமாயணம் பெறலாம். ✱

## நடராஜ் பைனான்ஸ் & இன்வெஸ்ட்மென்ட்ஸ்

NATARAJ FINANCE & INVESTMENTS,
NATARAJ CHITS (TAMILNADU) PVT. LTD.,
NATARAJ ESTATES - FARM HOUSE PROMOTERS,
"Shanthi Complex" 3rd Floor, 26, Ranganathan Street, T. Nagar, Madras - 600 017.

BRANCHES :
2-B, Selvam Nagar, M.C. Road, Thanjavur - 613 007.
1-B, Kamarajar Road (upstair), Kancheepuram - 631 501.

CHIT & FINANCE

OIL MILLS


EXPORTS

FARM HOUSE

PUBLICATIONS




# SREE KRISHNA

## CUT PIECE COLLECTION PVT. LTD.

### THE SHOP FOR WHOLE FAMILY
39 GODOWN STREET, MADRAS - 1 PH: 589596

EXCLUSIVE FOR READY MADE
EXCLUSIVE MATCHING BLOUSES
EXCLUSIVE FOR UNIFORM

specialists in suitings, shirtings, cut-pieces, summer cotton sarees, madurai chungudi cotton, belgaum pattu silks, benaras silks, venkatagiri bengal cotton and churidar

Avail 10% Discount till Deepavali.
Shop open on all Sundays till Deepavali. Even at midnight



**''டி.எஸ்.பி.கிட்டே மாணவர்கள் குருப்பா வந்து என்ன பெர்மிஷன் கேட்கிறாங்க?''**

**''காலேஜ்ல யூனியன் தேர்தலாம்... மூணு பஸ்ல கண்ணாடியை நொறுக்கறதுக்கும், ரெண்டு வெடி குண்டு காலேஜ் காம்பவுண்டுல போட்டுக்கறதுக்கும் சிட்டி சென்டர் ப்ளேஸ்ல வாண வேடிக்கை நடத்துறதுக்கும் பர்மிஷன் கேக்கறாங்க!''**

**– கே. ஜி. எஸ். கோவிந்தன்**

கொண்டது.

அன்று அந்த பார்லிமெண்ட் கூட்டத் தொடரின் கடைசி நாள். உள்துறை சம்பந்தமான வேறு முக்கிய விஷயங்கள் எதுவும் விவாதிக்க இல்லை.

நான் அமைச்சரிடம், "சார்! இன்று இந்த விஷயத்தைப் பார்லிமெண்ட்டில் அறிமுகப் படுத்தி விடலாம். கடைசி நாள் வேறு... அடுத்த 'செஷனி'ல் விவாதிக்கும் வரை யோசிக்க நேரம் கிடைக்கும்!" என்றேன்.

பிரும்மானந்த ரெட்டி ஒப்புக் கொண்டார். அறிவித்தும் விட்டார். நாங்கள் முற்றிலும் எதிர்பார்க்காதவிதமாக அப்போது அதற்கு எழுந்த எதிர்ப்பு இருக்கிறதே...

கூச்சலும் குழப்பமுமாக சபையே கலகலக்க...

இதில் விசேஷம் என்னவென்றால் ஆளும் காங்கிரஸ் எம்.பிக்களே அதற்கு எதிராகக் குரல் கொடுத்ததுதான்!

பிரும்மானந்த ரெட்டி மிகவும் 'அப்ஸெட்' ஆகி விட்டார். எதற்காக இத்தனை எதிர்ப்பு? இத்தனை மறுப்பு? இத்தனை கண்டனம்?

எனக்கு விளங்கி விட்டது! விஷயம் சரியாக விளங்கிக் கொள்ளப்படவில்லை!

அஸ்ஸாம், மேகாலயா போன்ற வடகிழக்குப் பகுதிகளில் மட்டுமே செல்லுபடியாகக் கூடிய அந்த சட்டத் திருத்தத்தை – எம்.பிக்கள், நாடு முழுவதற்குமான திருத்தம் என்று தவறாகக் கருதிக் கொண்டு விட்டார்கள்!

அல்லது, அரசு ஒரு Notification மூலமாக அந்த சிறப்புச் சட்டத் திருத்தத்தை, நாடு முழுக்கக் கொண்டு வந்து விடுமோ என்று சந்தேகப்பட்டு விட்டார்கள்.

ஒரே கூச்சல்! கலாட்டா!

**பி**ரும்மானந்த ரெட்டி தீவிரமாக யோசித்தார். மறுநாள் காலை என்னை அவர் வீட்டுக்குக் கூப்பிட்டு அனுப்பினார். போனேன்.

"நரசிம்மன், நாம் அறிவித்ததை மிகவும் தவறாகப் புரிந்து கொண்டு விட்டார்கள். எங்கள் கட்சி எம்.பிக்களே இப்படி எதிர்க்கிறார்கள் என்றால் முதலில் அவர்களுக்கு விஷயத்தை விளக்கி ஆக வேண்டும்!"

சொன்னதோடு அல்லாமல் உடனே அவர் வீட்டிலேயே ஒரு 'Get-to-Gether' ஏற்பாடு செய்தார். காங்கிரஸ் எம்.பிக்களுடன், திட்டத்தை எதிர்த்த இதர அத்தனை எம்.பிக்களும் அழைக்கப்பட்டனர்.

உள்துறை அமைச்சர் வீட்டு முன்புறத்தில் இருந்த புல்வெளியில் நடந்த அந்தச் சிறிய தேநீர் விருந்துக்கு, அமைச்சர் என்னையும் வரச் சொல்லியிருந்தார்.

கூட்டம் ஆரம்பமானதும், என்னை எம்.பிக்களுக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

"நரசிம்மன் எனது இணைச்செயலாளர். நேற்று நான் அறிவித்த – நீங்கள் எதிர்த்த சட்டத் திருத்தத்தைப் பற்றி உங்களுக்கு எழும் சந்தேகங்களுக்கு அவரே விளக்கம் தருவார். நீங்கள் ஆரம்பிக்கலாம்" என்று அறிவித்து விட்டு அமர்ந்து விட்டார்.

நான் பேசத் தொடங்கினேன். வடகிழக்கு மாநிலங்களுக்கு மட்டுமே பொருந்தக்கூடியது, அந்தச் சட்டத் திருத்தம் என்பதை விளக்கினேன். இதர மாநிலங்களுக்குப் பொருந்தாது என்பதை வலியுறுத்தினேன். அவர்களின் நியாயமான சந்தேகங்களுக்கு விளக்கம் தந்து அவர்களை ஒப்புக் கொள்ளச் செய்தேன். அமைச்சர் திருப்தி அடைந்தார்.

பார்லிமெண்ட்டில் அமைச்சர்கள், எம்.பிக்களைச் சந்திக்கிறார்கள். பார்லிமெண்ட்டுக்கு வெளியே, பார்லிமெண்ட் கமிட்டிகள் பல உள்ளன. அவற்றுக்கு அமைச்சர்கள் வருவதில்லை. செயலாளர்கள்தான் அந்த கமிட்டிகளை எதிர் கொள்கிறார்கள். ஆனால் குறிப்பிட்ட இந்த விஷயத்தில் அமைச்சர் செய்தது இந்த இரண்டுக்கும் இடைப்பட்ட காரியம்! மிகச் சிறப்பான அணுகுமுறை என்பேன்!

எம்.பிக்களைக் கூப்பிட்டு, அமைச்சர் நடத்திய கூட்டத்தில் ஒரு இணைச்செயலாளர் மூலம் விஷயத்தைத் தெளிவுபடுத்தியது அவரது சாமர்த்தியம்; அரசியல் விவேகம்!

ஆனால் ஒரு விஷயம் – அடுத்த பார்லிமெண்ட் கூட்டத் தொடர் ஆரம்பிப்பதற்கு முன் எமர்ஜென்ஸி வந்து விட, 'மீசா' தன் கை – கால்களையெல்லாம் விரித்துக் கொண்டு, வேறுமுகம் பூண்டு, புதிய பலத்துடன் நாடு முழுவதும் புகுந்து விளையாட ஆரம்பித்து விட்டது! இந்த சட்டத் திருத்தத்திற்கெல்லாம் அவசியமே இல்லாமல் போய் விட்டது!

(அடுத்த வாரம்)

# Kalki Shopping Page


WE WELCOME YOU TO THE WORLD OF KARISHMA CHURIDARS AND COTTON SAREES

OUR PRODUCTS

1. Karishma Churidars
2. Karishma Sarees
3. Andhra Pochham Palli Cotton Sarees
4. Belgaum Polyster (Saradha) Sarees
5. Banaras cotton sarees
6. Beekay Sarees (New product)

AALURI SAREES

*The Shop exclusively for Ladies*

(DEALER OF KARISHMA CHURIDARS & SAREES)

WHOLESALE & RETAIL

4/24 R.K. MUTT ROAD, LUZ BAZAAR,
MYLAPORE, MADRAS - 600 004.
PHONE : 4935791

Avail 10% discount till deepavali with this cutting

WE WELCOME CITIBANK CARDS





ADYAR

STUDENTS XEROX

*Quality that is close to perfection*

XEROX
LASER PRINTING
WORD PROCESSING
DTP
ELECTRONIC & MANUAL TYPING
BINDING & LAMINATION



GENUINE FESTIVAL DISCOUNT
(FROM 2-10-95 TO DEEPAVALI)

RANI SAREES HUGE STOCK OF

9YDS. SAREES - LOT OF CHOICE —
6 YDS. RANI SUPER QUALITY NOW AVAILABLE

BENGAL COTTON
MADURAI SUNGUDI

VARIOUS DESIGNS
DIFFERENT COLOURS

ALL FRESH STOCK






MADURAI TEXTILES

2, SIVAPRAKASAM ROAD,
T. NAGAR (PONDY BAZAAR), MADRAS-17
(NEAR VEGETABLE MARKET)

# God Lives Here



சொந்தக்காரங்கள்ளாம் என்னே வெறுத்து ஒதுக்கி வெளியே தள்ளினப்போ, ஐயோ கடவுளே! நீயுமா என்ன கைவிட்டுட்டேன்னு நினேச்சேன். அப்போ என்ன அன்பா அழைச்சி அடைக்கலம் கொடுத்து உதவும் கரங்கள் தான்.

கற்பகம் பாட்டி



சாக்கடையிலே விழுந்து புழுவா துடிச்சப்போ கடவுளே! எனக்கு விமோசனமே இல்லேயான்னு கதறனேன். கடைசியிலே என்ன கரை சேர்த்தது உதவும் கரங்கள்தான்.

பசவி



குழந்தையும் தெய்வமும் ஒன்னுன்னு சொல்லுவாங்க. அதனுலதானே என்னவோ, எங்கம்மா என்ன கோவில்ல அனுதையாக்கிட்டாங்க. சோறு தண்ணியில்லாம தவிச்சிக்கிட்டிருந்தப்போ என்ன எடுத்து காப்பாத்தினது உதவும் கரங்கள்தான்.

ஜனனி



இந்த எய்ட்ஸ் வியாதி கடவுள் கொடுத்த தண்டனேன்னு, சொந்தக்காரங்களும், டாக்டர்களும், கைவிட்டப்போ, நான் என்ன பாவம் செய்தேன் கடவுளேன்னு நடுத்தெருவிலே நின்னப்போ என்ன வாழவைச்சது உதவும் கரங்கள்தான்.

பரஞ்சோதி

**God**

எல்லோரும் என்னே கடவுளே! கடவுளேன்னு தேடறாங்க. நான் இருக்கிறது இந்த மாதிரி இடங்கள்ளேதான்னு அவங்களுக்கு காண்பிச்சிட்டேன் பாத்தீங்களா.

ஆம்! இன்று உதவும் கரங்கள் குடும்பத்திலே இவர்களேப்போல அனுதைக் குழந்தைகள் ஆபலேப் பெண்கள், உடல் ஊனமுற்ரோர், மனநிலே பாதிக்கப்பட்டோர், எய்ட்ஸ் நோயாளிகள், ஆதரவற்ற முதியோர் என 840 பேர்கள் உள்ளனர். இவர்கள் அனேவரும் வாழ்வதற்கு நம்பியிருப்பது உங்கள் உதவியைத்தான். * நன்கொடைகள் அனுப்ப வேண்டிய முகவரி

**உதவும் கரங்கள்**

480, என்.எஸ்.கே. நகர், அரும்பாக்கம், சென்னே 600 106.

* நன்கொடைகள் செக்/டி.டி./M.O. மூலம் அனுப்பி வைக்கலாம். நன்கொடைகளுக்கு வருமான வரி விலக்கு உண்டு.

# காந்தத் தண்ணீர் குடித்திருக்கிறீர்களா?



• பி. வி. நாராயணசாமி

ரஜினியை அரசியலும் சில அரசியல்வாதிகளான சந்திராசாமியும் காந்தமாக இழுக்கலாம்... ஆனால் அந்த காந்த சக்திகளால் நல்லதை விட தீங்கே அதிகம் விளையும்!

காந்த சக்தியைக் கொண்டு நல்லதும் செய்ய முடியும். சாட்சி – சென்னை அடையாறிலுள்ள பி.வி. நாராயணசாமி!

காந்தத்தை மருத்துவ சிகிச்சைக்குப் பயன்படுத்துகிறார். "உரிய டிப்ளமா பெற்றிருந்தாலும் என்னை நான் டாக்டர் என்று குறிப்பிட்டுக் கொள்வதில்லை. தவிர நான் நோய்க்குச் சிகிச்சை அளிப்பதாகக் கூற மாட்டேன்" என்கிறார்.

பின்னே?

உடலை ஆரோக்கியமாக வைத்துக் கொள்ள காந்தத்தைப் பயன்படுத்தும் வழி முறைகளைச் சொல்கிறாராம். உடல் ஆரோக்கியமாகிறது என்றாலே நோய்கள் விலகுகின்றன என்றுதானே அர்த்தம்!

காந்த சிகிச்சை மூலம் கிட்டத்தட்ட எல்லா நோய்களுமே விலகி விடுமாம். எப்படி?

"உலகமே ஒரு பெரிய காந்தம்" என்று சற்றே சாவகாசமாகத் தொடங்கினார் அவர்.

"சூரியன், சந்திரன், கிரகங்கள் எல்லாமே நம் பூமியைப் போலவே காந்தங்கள்தான். அதனால்தான் இந்தப் பிரபஞ்சம் முழுவதுமே காந்த அலைகளால் சூழப்பட்டிருக்கிறது. நம் உடலே கூட நிறைய காந்த சக்தி கொண்டதுதான். உடலின் வெவ்வேறு பாகங்களில் இந்த சக்தி குறையும் போதுதான் நோய்கள் உண்டாகின்றன" என்றார்.

உடலின் காந்த சக்தி குறைவதற்குக் காரணம் நாளுக்கு நாள் நம் தினசரி வாழ்வில் இரும்பை அதிகம் பயன்படுத்துவதுதானாம். நாற்காலி, கட்டில், கட்டடம், பஸ், ரயில் இப்படிப் பலவிதங்களிலும் இரும்போடு நம் உடல் கொள்ளும் தொடர்பு அதிகமாகிக் கொண்டே வருகிறது. இதனால் எக்கச்சக்க நோய்கள் உண்டாகின்றனவாம்.

இது உண்மையாகவே இருக்கட்டும். அதற்



காக இரும்பைப் பயன்படுத்தாமல் இருப்பது தற்கால உலகில் நடைமுறை சாத்தியம் இல்லையே!

"புரிகிறது. அதனால்தான் இந்த காந்த சிகிச்சை. காந்தத்தை நம் உடலில் வலி அல்லது வேறு ஏதாவது பிரச்னை தோன்றும் பகுதியில் குறிப்பிட்ட நேரத்துக்கு வைத்துக் கொண்டால் அந்தப் பகுதியில் உயிரணுக்கள் தங்களது இயற்கையான அதிர்வு அலைகளை மீண்டும் அடைகின்றன. இதனால் ரத்த ஓட்டம் சீரா கிறது. ரத்த ஓட்டம் சீராக இருந்தால் நோய் ஏது?"

மூட்டுவலி, புற்றுநோய், பெண்களுக்கு மாத விடாய் சுற்று சரிவராமலிருத்தல், வாய்நாற்றம் இவற்றிற்கெல்லாம் காந்த சிகிச்சையில் அற் புதத் தீர்வு உண்டு என்கிறார். சர்க்கரை வியா திக்குக் கூட இந்த சிகிச்சை தீர்வாக அமைகிற தாம். அதே சமயம் ஹெர்ணியா போன்ற அறுவை சிகிச்சை தேவைப்படும் சில உடல் நலக் குறைகளுக்கு அலோபதி சிகிச்சை அதி கப் பயன்தரும் என்று ஒத்துக் கொள்ளும் நாரா யணசாமி, தான் எந்தவித மருத்துவ முறைக்கும் எதிரானவனல்ல என்பதையும் அடிக்கோடிட் டுக் காட்டுகிறார். மற்ற மருத்துவ சிகிச்சை செய்து கொண் டிருப்பவர்கள் (அதை விட்டு விட மனமில்லையென்றால்) கூடவே காந்த சிகிச்சையையும் செய்து கொள்ளலாம் என் கிறார்.

**ச**க்திவாய்ந்த காந்தங்களை உடலின் குறிப்பிட்ட பகுதிகளில் வைத்துக் கொள்வது ஒரு வழிமுறை என்றால் இன்னொரு வழியும் உண்டு. அது காந்தத் தண்ணீரைக் குடிப்பது. காய்ச்சி வடிகட்டிய தண்ணீரை இரு பாட் டில்களில் அடைத்து, அவற்றில் ஒன்றை காந் தத்தின் வட துருவத்தின் மேற்பகுதியிலும், இன்னொன்றை மற்றொரு காந்தத்தின் தெற்கு துருவத்தின் மேற்பகுதியிலும் சில மணி நேரங் கள் வைத்திருந்து, பிறகு அந்தத் தண்ணீரைக் கலந்து தினமும் மூன்று முறை மூன்று அவுன்சு கள் என்று குடித்து வந்தால் முழு உடல் ஆரோக்கியத்தை அடையலாமாம்.

உடலின் எந்தப் பகுதியில் தேவையில்லாத வளர்ச்சி இருந்தாலும் காந்தத் தண்ணீரைக் குடிப்பதன் மூலம் சரிசெய்து கொள்ள முடி யும் என்கிறார்.

"இந்த சிகிச்சை முறையில் பக்கவிளைவு கள் கிடையாது. ஒருமுறை வாங்கிய காந்தத்தை ஆயுளுக்கும் - ஏன் பரம்பரை பரம்பரையாக வும் பயன்படுத்திக் கொள்ளலாம் என்பதால் செலவும் குறைவு" என்கிறார் இவர்.

**நா**ராயணசாமியின் உடல்நலக் கூடத் தில் பலவித காந்தங்கள் பொருத்தப்பட்ட பெல்ட்டுகளைப் பார்க்க முடிந்தது. மூட்டு வலிக்கு, தேமலுக்கு, சர்க்கரை வியாதிக்கு, ரத்த அழுத்தத்திற்கு என்று பலவற்றிற்கானவை. தொந்தியைக் குறைக்கக் கூட ஒரு காந்த பெல்ட் இருந்தது. அதைப் பார்த்த நாம் அடுத்து எதைக் கவனிக்கிறோம் என்பதைத் தெரிந்து கொண்டு, "ஏன், என் தொப்பையைக் கரைச்சுக்கல்லேன்னு கேட்கறீங்களா? இது பரம்பரை சொத்து! ஆனால், குனிந்தாலோ நிமிர்ந்தாலோ எனக்கு மூச்சு வாங்காது" என் றார் சிரித்துக் கொண்டே.

— ஜி.எஸ்.எஸ்.

---

## குமுறல்



இவன் வீட்டு
அடுப்படி முழுக்க
அடுக்குப் பானைகள்....
ஆனால்...
உலையில் போட
ஒருகை அரிசி இல்லை....
குமுறுகிறான் குயவன்!

— ஜெ. கீதா

15.10.95

தீபாவளிச் சிறப்பிதழில்...

ரமணி சந்திரன்

எழுதும்

புதிய தொடர்

மாலை மயங்குகின்ற நேரம்...

சிறுகதை ஸ்பெஷல்!



அதிக பக்கங்க்ள்!

ரொம்ப எதிர்பார்த்தார்கள். சமீபத்தில் நடந்த மத்திய அமைச்சரவை விஸ்தரிப்பு உற்சவத்தில், தமிழ்நாட்டு எம்.பி. யாருக்காவது 'லக்' அடிக்கும் என்று. கடைசி நிமிடம் வரை சஸ்பென்ஸாகவே வைத்திருந்து பிரும்மாண்டமான ஏமாற்றப் பரிசைத் தந்து விட்டார் ராவ்.

இதுபற்றித் தமிழக காங்கிரஸ் எம்பிக்கள் என்ன நினைக்கிறார்கள்? ஏற்கெனவே தங்களுக்குள் குடுமிப்பிடி சண்டை போட்டுக் கொண்டு இருக்கும் த. நா. காங்கிரஸுக்கு, இந்த விவகாரத்தால் நேர்ந்துள்ள சலிப்பு, என்ன மாதிரி விளைவுகளை உருவாக்கும்?

இரா. அன்பரசு, எம்.பி.ஐச் சந்தித்துக் கேட்டோம் :

"அமைச்சரவை விஸ்தரிப்பு தமிழகத்தில் மட்டுமில்லை; இதர மாநில எம்பிக்கள் பலரிடையேயும் அதிருப்தி

# அன்பரசு, எம்.பி. பேட்டி

ஏற்படுத்தியிருப்பது உண்மைதான். அதற்கான காரணங்களும் நியாயமானவைதான். கட்சியில் பல வருடங்களாய் இருந்துவரும் சீனியர்களைப் புறக்கணித்து விட்டு, ஜூனியர்கள் பலருக்கு இடம்தரப்பட்டுள்ளது. மாநில வாரியான பிரதிநிதித்துவம் இல்லை. கணிசமான மக்கள் தொகை கொண்ட ஒருசில இனத்தவருக்கு, இடம் தரவில்லை. ராஜ்ய சபா எம்.பிக்கள் நிறைய பேர் அமைச்சர்களாகியிருக்கிறார்கள்!"

"இதற்கு என்ன காரணம்?"

"பிரதமரை, சுதந்தரமாய்ச் செயல்பட விடாமல் சில சக்திகள் தடுத்து விட்டன. மாநில அளவிலிருந்து கட்சித் தலைவர்கள் கொடுத்த பிரஷர், இத்தகைய நிலைமையில் கொண்டு போய் விட்டு விட்டது! உதாரணம் சொல்ல வேண்டுமானால், கேரள முதலமைச்சர் ஏ.கே. ஆண்டனி கொடுத்த பிரஷர் காரணமாய் கிருஷ்ணகுமாரின் பதவி பறிபோனது; புரொபஸர் குரியனுக்கு நாற்காலி யோகம் அடித்தது. ஒவ்வொரு ஊருக்கும் இதுபோலக் கதை இருக்கிறது!"

"மீண்டும் தமிழகம் புறக்கணிக்கப் பட்டு விட்டதாக நினைக்கிறீர்களா?"

"அப்படிச் சொல்ல முடியாது! எல்லா மாநிலங்களையும் பிரதமர் ஒன்று



போலத்தான் பார்க்கிறார். யாரையும் புறக்கணிக்க வேண்டும் என்ற எண்ணம் அவருக்குக் கிடையாது. முதலில் பிரதமர் போட்டிருந்த லிஸ்ட்படி ப. சிதம்பரம் கேபினட் அந்தஸ்துள்ள அமைச்சராகியிருக்க வேண்டும். இன்னொரு அமைச்சர் பதவியும் தமிழ்நாட்டுக்குக் கிடைத்திருக்க வேண்டும். ஆனால் வேறு மூன்று பேர், வேறு சிலரால் சிபாரிசு செய்யப்பட, விளைவு, மொத்தமும் பூஜ்ஜியமாகி விட்டது!"

**"உங்கள் பெயர் கூட அடிபட்டதே! பதவி கிடைக்காததில் உங்களுக்கு வருத்தம்தானே?"**

"நான் சாதாரண குடும்பத்தைச் சேர்ந்தவன். சிறு வயது முதலே பலவிதமான கஷ்டங்களை அனுபவித்து விட்டவன். எனக்கும் ஆசை, எதிர்பார்ப்புகள் உண்டு. ஆனால் அவை நிறைவேறாத பட்சத்தில் ஏமாற்றம் ஏற்படுவதில்லை. காரணம், ஏமாற்றம் எனக்குப் பழகிப் போன ஒன்று. '84ல் எனக்குத் தேர்தலில் நிற்க சீட் தரப்படவில்லை. விஷயம் கேள்விப்பட்டதும் என் மனைவி அழுதே விட்டாள். நான் 'அதனால் என்ன?' என்று லைட்டாய் எடுத்துக் கொண்டு விட்டேன்.

# "ஏமாற்றம் எனக்குப் புதிதல்ல!"

"அண்மையில் பிரதமரைப் பார்த்த போது, என் மனநிலையை விளக்கி, "ஐயா! நான் காயம்பட்ட ராணுவ வீரன்; ஆனால் விசுவாசமான வீரன்" என்றேன். பிரதமர் புரிந்து கொண்டு சிரித்தார்!"

**"சோனியா factor என்பது காங்கிரஸில் எந்தவித பாதிப்பை ஏற்படுத்தும்?"**

"அந்த அம்மையார், வெட்டு ஒன்று, துண்டு ரெண்டு என தன் அரசியல் பிரவேசம் பற்றி உறுதியாக அறிவிக்காதவரை, பலவித அனுமானங்களைப் பலரும் வெளியிட்டுக் கொண்டுதான் இருப்பார்கள். அர்ஜுன் சிங், என்.டி. திவாரி போன்ற பெருந்தலைகளையே சமாளித்து விட்டவர் பிரதமர். சோனியா காந்தி வந்தால் ஏற்படும் நெருக்கடியை சாமர்த்தியமாய்ச் சமாளித்து விடுவார். கட்சித் தலைமை சோனியா காந்திக்கு; பிரதமர் பொறுப்பு நரசிம்மராவுக்கு என்று கூட முடிவு எடுக்கப்படலாம்!"

**"தமிழ்நாட்டைப் பொறுத்தவரை வாழப்பாடி அணியினரின் செல்வாக்கு எப்படி இருக்கும் என்று கருதுகிறீர்கள்?"**

"தமிழக அரசியலில் புதிய கூட்டணிகள் உருவாகப் போகின்றன. ரஜினிகாந்த் + காங்கிரஸ் + தி.மு.க. + பாட்டாளி மக்கள் கட்சி + அம்பேத்கார் மக்கள் இயக்கம் + திருநாவுக்கரசின் கட்சி + பார்வர்டு பிளாக் இவை ஓர் அணியில் இருக்கும். வாழப்பாடி அணியில் இருப்பவர்கள் பெரும்பாலும் வன்னியர்கள்தான். பா.ம.க. எங்கள் அணியில் இருக்கும் போது, வாழப்பாடி அணிக்குப் பெரிதாய் வாய்ஸ் கிடையாது!"

**"விடுதலைப் புலிகள் ஆதரவாளர்களான பா.ம.க.வுடன் காங்கிரஸ் கூட்டணி சேருவது எந்தவிதத்தில் நியாயம்?"**

இந்தக் கேள்வியைப் பலரும் கேட்கிறார்கள். ஈழத் தமிழர் பிரச்னையைப் பொறுத்தவரை, தமிழீழம்தான் ஒரே தீர்வு என்ற அடிப்படையில் தமிழீழத்துக்குப் போராடும் விடுதலைப் புலிகளை அவர்கள் ஆதரிக்கிறார்கள். ஆனால் ராஜீவ் படுகொலை விஷயத்தில் விடுதலைப் புலிகளை பா.ம.க.வும் கண்டித்துள்ளது! இன்னொரு விஷயம். இதுவரை ராஜீவ் கொலை வழக்கு சம்பந்தமாய் பா.ம. கட்சிக்காரர் ஒருவர் கூட கைது செய்யப்படவில்லை; குற்றம்சாட்டப்படவில்லை. அப்புறம் ஏன் கூட்டணி வைத்துக் கொள்ளக் கூடாது?" என்று ஒரு போடு போட்டார் அன்பரசு!

சந்திப்பு :
**எஸ். சந்திரமௌளி**

போஸ்ட்கக் அல்வா!

## வட்டமேஜை

✉ கலாட்டா கல்யாணம் நடந்த அன்று எண்ணற்ற கோயில்களில் தம்பதிகளின் பெயரில் அர்ச்சனையாம்! ஆயிரம் இருந்தும் வசதிகள் இருந்தும் ஆடம்பரம் இருந்தும் என்ன புண்ணியம்? திருமணத்தை ஒரு பொது ஜனமாவது மனமார வாழ்த்தியிருப்பாரா என்பது சந்தேகம்தான். அந்த அளவிற்கு அன்றாட அலுவல்கள் அன்று ஸ்தம்பித்து இருக்கின்றன.

இலால்குடி, ஆங்கரை பைரவி.

✉ பெண்கள் நலனிற்காகக் கூட்டப்பட்ட, பெய்ஜிங் மாநாடு சில தலைவர்களால் அரசியலாக்கப் பட்டது மிகவும் வேதனைக்குரியது. இனிமேலாவது இது போன்ற பிரச்னைகள் ஏற்படாவண்ணம் தடுக்க வேண்டியது ஐ.நா. சபையின் முக்கிய நோக்கமாக இருக்க வேண்டும். தவறினால் மாநாடுகள் நடத்துவதால் பலன் ஏதும் ஏற்படாது.

தஞ்சாவூர் – 5, வனிதா ரவி.

✉ ஜெயலலிதாவிற்கு வேண்டப்படாத அரசியல்வாதிகள் எல்லோரும் நல்லவரா? ஆர்.எம்.வீ. அறநிலையத் துறை மந்திரியாக இருந்த போது நடந்தவைகளைத்தான் மறக்க முடியுமா? திருநாவுக்கரசு பற்றித் தெரியாதா? காங்கிரஸ்காரர்கள் என்னவெல்லாம் செய்தார்கள்? இவர்களை நம்பி இவர்களுடன் கூட்டு சேர நினைக்கும் ரஜினி மட்டும் அரசியலில் என்ன சாதித்து விடப் போகிறார்? ரஜினியைத் தலைவராக வைத்துக் கொண்டு அதே பழைய கொள்ளைக் கூட்டம் கொட்டமடிக்கப் போகிறது. மக்கள் எந்த அரசியல் மாற்றம் செய்தாலும் பழம்பெருச்சாளிகள்தான் நாட்டை சுரண்டப் போகிறார்கள்.

சென்னை – 18, ஆர். நடராஜன்.

✉ அடுத்த மாதம் அப்பா ஆகப் போகும் எனக்கு இத் தருணத்தில் 'கவர் ஸ்டோரி' மூலம் தகுந்த ஆலோசனைகள் வழங்கிய 'கல்கி'க்கு எனது நன்றியினைத் தெரியப் படுத்திக் கொள்கிறேன்.

திருநெல்வேலி, வீ. முத்தையா.

✉ 'அப்பா ஆகப் போறீங்களா?' கவர் ஸ்டோரிக்கு அசட்டுச் சிரிப்புடன் தி. ராகவனின் அசத்தலான 'போஸ்' அழகோ அழகு! 'கிளிக்' செய்த யோகாவுக்குப் பாராட்டுக்கள்!

சென்னை – 78, பூங்கோதை குப்புஸ்வாமி.

✉ குப்பை, கூளங்களைக் கூட்டிப் பெருக்கி வீதிகளில் விட்டெறியும் பொறுப்பற்ற மக்கள் மத்தியில் குப்பையைக் கிளறி, 'கருப்புத் தங்கம்' தயாரிக்கும் பெங்களூர் கணேசாவை நினைக்கும்போது பெருமிதமாக இருக்கிறது!

கும்பகோணம், கே. என். பாலகிருஷ்ணன்.

### ரூ. 20 பரிசு பெறும் கடிதம்

✉ சிங்கப்பூர் பிரதமரின் சம்பளம் 15 இலட்சமாக இருந்தாலும், அமெரிக்க அதிபரின் சம்பளத்தை விட அதிகமாக இருந்தாலும், அது நம் முதல்வர் சம்பளமாகப் பெறும் அந்த "ஒரு ரூபாய்"க்கு ஈடாகுமா?

பஞ்சநதிக்குளம், வி. கார்த்தி.

✉ சிங்கப்பூர் பயண அனுபவங்களை இசக்கி வர்ணித்திருந்த விதம் அருமை. நேரில் போய்ப் பார்த்த உணர்வே ஏற்பட்டது!

திண்டுக்கல், சிவபாலன்.

✉ பெற்றோருக்கு ஜீவனாம்சம் வாங்கித் தரும் சிங்கப்பூரின் சட்டம், மனிதநேயம் மிக்கதால் வணங்கப்பட வேண்டியதுதான்.

தஞ்சாவூர் – 7, வளர்மதி ஆசைத்தம்பி.

✉ 'உதையின் கதை'யைப் படித்தேன். கேசட்டைப் பறிகொடுக்காமல் போலீஸ்காரர்களுக்கே அல்வா கொடுத்த கண்ணனை எவ்வளவு பாராட்டினாலும் தகும்!

பெங்களூர், கே. விஸ்வநாத்.

✉ சரண்சிங் குறித்து சி.வி. நரசிம்மன் எழுதி இருந்ததைப் படித்ததும் ஒரு சம்பவம் நினைவிற்கு வந்தது : அப்போது உள்துறை இலாகாவில் பணியாற்றி வந்தேன். காலை காரியாலயம் அடைந்து லிஃப்ட்டுக்குள் நுழைந்தேன். லிஃப்ட் ஆபரேட்டர் வெளியே நின்று பீடி குடித்தவாறு இன்னும் யாராவது வருகிறார்களா என்று காத்துக் கொண்டிருந்தார்.

திடீரென்று பீடித் துண்டத்தைத் தூக்கி எறிந்து விட்டு லிஃப்டுக்குள் புகுந்து என் கரங்களைப் பற்றி இழுத்து வெளியே கொண்டு வந்து நிறுத்தினார். காரணம், உள்துறை அமைச்சர் சரண்சிங் வந்து கொண்டிருந்ததுதான். இதைக் கண்டுவிட்ட அவர், 'ஏற்கெனவே லிஃப்டுக்குள் இருந்த உங்களை வெளியே வரச் சொன்னது தவறு. நீங்களும் வாருங்கள், சேர்ந்தே போகலாம்' என்று கூறி என் தோள் மீது வலக்கரத்தைப் போட்டு அன்புடன் அழைத்துப் போனார்!

புதுதில்லி, பி. கிருஷ்ணமூர்த்தி.



# திருமகள்

புதிய கிளைகள் திறப்பு விழா

அக்டோபர் 3 முதல்

## பாரிமுனை

160, தம்பு செட்டி தெரு, சென்னை - 1.

மற்றும்

## புரசைவாக்கம்

89/12, பெரம்பூர் பேரக்ஸ் ரோடு, டவுட்டன், சென்னை - 7.

## குரோம்பேட்டை

செப்டம்பர் 11 முதல் செயல்படுகிறது

S.R.S. காம்பளக்ஸ், புதிய எண் : 52, G.S.T. ரோடு, சென்னை-44.
C.M. கல்யாண மண்டபம் எதிரில்




## திருமகளில் திருவிழா 30 நாட்கள்

செப்டம்பர் 7 முதல் அக்டோபர் 6 வரை
தலைமை அலுவலகம் மற்றும் கிளைகளில்

**25% + 5%**

வட்டி ஊக்கத்தொகை

SPRINGHEAD

## THIRUMAGAL LEASING

Head Office : 9, Ramanathan Street, T.Nagar, Madras - 17. Ph : 434 74 08
Branch : 194, V.V.P. Building, Anna Salai, Thiruvarur, Ph : 22906.

திருமகள்.. உங்கள் வீட்டுப் பொன்மகள்

Working Hours : 10.00 A.M. to 6.30 P.M. Sundays : 10.00 A.M. to 1.00 P.M.

# சூர்யா எஸ்டேட் பைனான்ஸ்

## டெபாசிட் சேகரிப்பு விழா

**24-9-95** முதல் **5-10-95** முடிய
டெபாசிட் திட்டத்தில் சேருபவர்களுக்கு மட்டும்
**கவர்ச்சிகரமான பரிசுகள் உண்டு**

இச்சலுகை இந்த **12** நாட்களுக்கு மட்டுமே

**24%** வட்டி + **5%** ஊக்கத்தொகை

பென்சன்தாரர்களுக்கும், விதவைகளுக்கும் 1% கூடுதல் சிறப்பு சலுகை உண்டு

விவரங்களுக்கு அணுகவும் :




**சூர்யா எஸ்டேட் பைனான்ஸ்**
12, வெங்கடேசன் தெரு, தி.நகர், சென்னை-600 017.
போன்: **4342405, 4347627** (G. R. தங்க மாளிகைக்கு எதிரில்)
இந்த விழாவை முன்னிட்டு ஞாயிற்றுக்கிழமைகளிலும் அலுவலகம் உண்டு


உ

*ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:*

## ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் 64-வது ஆசார்யாள் அவர்களின் வார்ஷிக ஆராதனை மஹோத்ஸவம்

## 25-10-1995 புதன்கிழமை

*வடகோடி பிருந்தாவனம், கும்பகோணம்-612 001.*
*(ஸ்ரீ காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகளின் பராத்பரகுரு ஆராதனை)*

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தை அலங்கரித்த 64-வது ஆசார்யாளான ஸ்ரீ சந்திர சேகரேந்த்ர ஸரஸ்வதி ஸ்ரீ சரணர்களின் வார்ஷிக ஆராதனை இவ்வருஷம் க்ருத்திகா கல்ல த்விதீயா (25-10-95) புதன்கிழமையன்று கும்பகோணத்திலுள்ள அன்னாரது அவதார க்ருஹத்தில் 34 வேத வித்துக்களைக் கொண்டு நடத்துவதற்கு ஸ்ரீ மஹாஸந்நிதானங்கள் அனுக்ரஹித்திருக்கிறார்கள். ஆகையால் இப்புனிதமான ஆராதனையை நடத்த குறைந்தபக்ஷமாக ரூ.1,00,000/- தேவைப்படுகிறது.

பக்தகோடிகளின் பேருதவியாலேயே செய்யப்படும் இந்த மஹத்தான கைங்கர்யத்தில் எல்லா அன்பர்களும் நேரிடையாகக் கலந்துகொண்டு எல்லா அம்சங்களிலும் ஒத்துழைத்து திரவ்விய உபகாரம் செய்து இப்புனிதமான ஆராதனையை விமரிசையாக நடத்திக் கொடுத்து ஸ்ரீ மஹாநீயர்களின் பரிபூர்ண அனுக்ரஹத்திற்குப் பாத்திரர்களாகும்படி கேட்டுக்கொள்கிறோம்.

நன்கொடையாளர்கள் தங்கள் மேலான அன்பு காணிக்கையை MO/DD/Cheque-Favouring வடகோடி பிருந்தாவனம் டிரஸ்டு A/C Payee என்று குறிப்பிட்டு, 'குலபதி' K.G.கிருஷ்ணமூர்த்தி, **Retd. Head Master**, *24*, டபீர் நடுத்தெரு, கும்பகோணம்-*612 001* - என்ற விலாசத்திற்கு அனுப்ப வேண்டுகிறோம். இந்த புனித பணிக்கு உதவி செய்வோர்/நேரில் கலந்து கொள்வோர் எல்லா நன்மைகளையும் பெற்று ஸ்ரீமஹாநீயர்களின் பரமானு க்ரஹத்திற்குப் பாத்திரமாகிறார்கள் என்பதில் ஐயமில்லை.

**T.S. குருமூர்த்தி**
(Retd. Chief Cashier UCO Bank)
Trustee & Convener

**"மந்த்ரி ரத்னம்" A.R. சேஷய்யா சாஸ்திரி**
(முன்னாள் ஸ்ரீகார்யம் & ஏஜண்ட் ஸ்ரீ காமகோடி பீடம்)
மானேஜிங் டிரஸ்டி




**நீண்ட காலம் காத்திருக்க நேர்ந்தாலும் வெற்றி–தோல்வி பற்றிக் கவலைப்படாமல் ஒரு வித்தியாசமான கோணத்தில் 'ஆசை' படத்தைத் தந்திருக்கிறார் வஸந்த். அவரைச் சந்தித்த போது...**

“ 'ஆசை'யின் கதை உருவானது எப்படி?”

“ஃபேமிலி த்ரில்லர் ஒன்று எடுக்க வேண்டும் என்று ஆசைப்பட்டேன். புழக்கத்தில் இல்லாத ஒரு மாறுபட்ட வில்லன் கேரக்டரை உருவாக்க விரும்பினேன். 'பவர்ஃபுல்'லான அந்த வில்லனைச் சுற்றியே கதை பின்ன விரும்பினேன். படமும் அப்படியே அமைந்தது!”

“அத்தனை பவர்ஃபுல்லான அந்த வில்லன் கேரக்டருக்கு இன்ஸ்பிரேஷன்...”

“இரண்டு பேரைச் சொல்வேன். என் குருநாதர் கே.பி. சாரின் 'அவர்கள்' படத்தில் வரும் ரஜினி கேரக்டரும் 'உதிரிப்பூக்கள்' விஜயனும் இந்த கேரக்டருக்கு இன்ஸ்பிரேஷனாக அமைந்தவர்கள்...

“இன்னொரு விஷயம். வழக்கமாக 'வில்லன்' என்றால், அவனிடம் பாராட்டும்படி ஒரு விஷயமும் இருக்காது, நம் சினிமாக்களில். ஆனால், 'ஆசை' வில்லன், தன் மனைவியின் தங்கை மேல் ஆசைப்படுகிறான் என்பதைத் தவிர பர்ஃபெக்ட் ஜென்டில்மேன். இதை எடுத்துக்காட்டத்தான் அந்த கேரக்டரை ஒரு மிலிட்டரி ஆபீசராக வைத்திருந்தேன்.

“மேலும் நான் நினைத்த அளவுக்கு 'இம்ப்ரஸிவா'க வர வேண்டும் என்பதற்காக, நிறைய யோசிக்கவும் வேண்டியிருந்தது. பார்த்தவுடன் சல்யூட் அடிக்கத் தோன்றும் கம்பீரம், ட்யூட்டியில் எத்தனை சின்ஸியர் ஆசாமி என்பதைக் காட்ட மேலதிகாரி நிழல்கள் ரவி தரும் சர்ட்டிபிகேட், என்று அவரது பிளஸ் பாயின்ட்டுகளையும் காட்டும் சம்பவங்களைப் பொருத்தமாகச் சேர்க்க மிகவும் மெனக்கெட்டேன். மறுபுறம், 'சாப்பாட்டில் கல்' என்றால் முழு உணவையும் குப்பையில் கொட்டுவது, மச்சினிக்காக மனைவியைக் கொல்ல முனைவது, காதல் பரிசான நாய்க்குட்டியை அநியாயமாக சாகடிப்பது, மழையில் குழந்தையைக் கதறக் கதற நனைத்து ஜுரம் வரவழைப்பது போன்ற காட்சிகளால், அந்தக் கேரக்டரால் நான் காண்பிக்க விரும்பிய 'அதிர்ச்சி மதிப்பை' அதிகப்படுத்தினேன். அதுதான் அந்த வில்லன் பாத்திரத்தை ஒரு ஹீரோவை விட கவர்ச்சிகரமான நிலைக்குக் கொண்டு போய் விட்டது போலும்!”

“அது சரி. எப்படிப் பிடித்தீர்கள் இந்த பிரகாஷ்ராஜை?”

“ஏ.வி.எம். ஸ்டுடியோவில் கே.பி. சார் ஷூட்டிங் நடந்து கொண்டிருந்தது. 'மிக அநாயாசமாக, அவரிடம் ஒரு திட்டு கூட வாங்காமல் நடித்துக் கொண்டிருக்கும் இந்த ஆள் யார்' என்று விசாரித்தேன். மேலும்

அவரைக் கூர்ந்து கவனித்ததில், நான் நினைத்த விதத்தில் என் வில்லன் கேரக்டரை அழகூட்ட இவர்தான் சரியான ஆள் என்று தோன்றியது. உடனே மேக்-அப் டெஸ்ட் எடுத்து, ஷூட்டிங் தொடங்கி விட்டேன்!"

"ஹீரோயினுக்காகத்தான் ரொம்பக் கஷ்டப்பட்டீர்கள் போல இருக்கிறது?"

"ஆமாம்! எதையும் நிஜமென நம்புகிற அப்பாவி முகம் பூர்ணம் விசுவனாதனுக்கு. அவரது பெண் கேரக்டருக்கும், அதைவிட அதிகமான அப்பாவித்தனம் சொட்டும் முகத்தைத் தேடினேன். நம் ஊரில் எதிர்பார்த்தபடி யாரும் கிடைக்காமல் பம்பாய் போனேன். சுவலட்சுமியிடம் எதிர்பார்த்த அப்பாவித்தனம் இருந்தது. தேர்ந்தெடுத்தேன்."

"ரஹ்மான் போலவே தேவாவும் இசையில் தூள் கிளப்பியிருக்கிறாரே!"

"நான் ரஹ்மான் ரசிகன். தேவாவுக்கும் ரஹ்மான் மேல் மிகுந்த மரியாதை. எனவேதான் நான் எதிர்பார்த்ததும், தேவா போட்ட மியூஸிக்கும் சிறப்பாக வந்திருப்பதாய் நான் நினைக்கிறேன். மிகுந்த சிரத்தை எடுத்துக் கொண்டு பின்னணி இசையமைத்துக் கொடுத்தார். 'இந்த மாதிரி பாட்டு வேணும்னு யாரும் என்கிட்ட திரும்பத் திரும்ப கேட்டு, வேலை வாங்க மாட்டேங்கறாங்களே!'ன்னு என்னிடம் தேவா கூறிய போது சந்தோஷமாக இருந்தது."

"படத்தைப் பார்த்து விட்டு மணிரத்தினம் என்ன சொன்னார்?"

"பல சின்ன விஷயங்களையும் கூட மிக நுணுக்கமாய் கவனித்துப் பாராட்டினார். தமிழ் தெருக்கூத்து ராமாயணத்தில் படத்தை ஆரம்பித்து, இந்தி ராமாயணத்துடன் படத்தை முடித்திருப்பதை ரொம்ப ரசித்தார்."

— மௌலி

---

# தேவை - காயலான் கடை; தயார் - கனவுக் கோட்டை!

படத்தைப் பாருங்கள். என்ன ஒரு அட்டகாசமான பங்களா! எத்தனை லட்சம் மதிப்புப் போடுவீர்கள்?

ஆனால் இந்த பங்களா எப்படிக் கட்டப்பட்டது என்று தெரிந்தால் மயக்கம் போட்டு விடுவீர்கள்!

பழைய கார், உடைந்த பாலங்கள், உருப்படாத மரத்துண்டுகள், பாலிதின் பேப்பர்கள், கம்ப்யூட்டரின் மேல் சட்டை இப்படி வேஸ்ட்டான பொருட்களைக் கொண்டே கட்டப்பட்டது இந்த பங்களா! இங்கல்ல; அமெரிக்கா - மெரிலண்டில்!

பொம்மை வீடல்ல; நிஜ வீடு! முழுவதும் இரும்பால் (உடைந்த பாகங்களை வளைத்தும் நெளித்தும் வேண்டிய வடிவில் மாற்றி) கட்டப்பட்டுள்ள இந்த பங்களா, 335 சதுர மீட்டரில், நான்கு பெட்ரூம், இரண்டு குளியலறை, இரண்டு கார் ஷெட், சமையலறை, வரவேற்பறை என்று சலகமான வசதிகளுடனும் எழுந்து நிற்கிறது.



வீடு கட்டுகிற செலவைக் குறைக்க அந்த ஊர் வீட்டு வசதி வாரியம் கண்டுபிடித்திருக்கும் நூதன முறை இது. நூதனத்திலும் நூதனம் என்னவெனில், இந்த முறையில் வீடு கட்டும் போது கிடைக்கும் கழிவுப் பொருள்களைக் கூட வீணாக்காமல், மீண்டும் வேறு கட்டடங்கள் கட்டப் பயன்படுத்துகிறார்கள்.

— கிச்சா

நன்றி : ஸ்பான்

# Every thing is Very good

NEW DESIGNS
VARIETIES
COLOURS
AND MORE QUALITIES
FOR



EV
Collection



*Chudidars & Nighties*

*All Garments Exclusive Designs Created By*

**ANANTHA**
**CORPORATION**

**N.S.B. Road / Chinnakadai Street, Trichy - 2.**

# காத்து கறுப்பு

கௌரி கிருபாநிதி

திருமணம் முடிந்து ஒரு வாரமாகி இருந்தது. சரவணன் கனவு சீன் மாதிரி, ஆகாயத்தில் மிதந்து கொண்டிருந்தான். திரையுலக நாயகர்களைப் போல், புது மணவாழ்வை விதம் விதமாக அனுபவிக்க விரும்பினான். ஒரே நாளில் மனைவியுடன் மூன்று சினிமா பார்த்தான்.

ஒரே இளநீரை, ஒரே குளிர்பானத்தை, ஒரே சமயத்தில் மனைவியுடன் பகிர்ந்து கொண்டான். அவள் எதிர்பாராத தருணங்களில் அவளை திக்குமுக்காட வைத்தான். வெட்கமுறச் செய்தான்.

"நல்ல வேளை... சொர்ணம், செம்பகம்னு பட்டிக்காட்டுப் பேரா வெக்காம, ஒனக்கு ஸ்ரீதேவின்னு பேர் வெச்சாங்க. இல்லேன்னா, முதல் வேலையா ஒம் பேரை மாத்தியிருப்பேன்..."

"பேரு மட்டுமா? எம் மரு மவ நெசமாலுமே ஸ்ரீதேவி தான்டா.. ஏம்மா... இந்தப் பய பேசறதையும் நடந்துக்கறதையும் பார்த்துப் பயந்துறாதே... சினிமாப் பித்துதான் இவனை இப்பிடி ஆட்டி வெக்குது. மத்தபடி நல்ல பயதான்.. எலே! பூ மாதிரி பொண்ணுடா.. பார்த்து நடந்துக்க.. என்ன?"

மறுநாள் அவர்கள் தேன் நிலவுப் பயணத்தைத் துவக்கினார்கள்.

"சரவணா! வேளை கெட்ட வேளையிலே இவளோட கண்ட இடத்துலே சுத்தாதே. காத்து - கறுப்பு அண்டாம பத்திரமா பார்த்துக்க..."

சட்டென்று சூட்கேஸை கீழே வைத்து விட்டு, அருகிலிருந்த கம்பை எடுத்துச் சுழற்றிய வாறே, நாலு தாவு தாவினான் சரவணன்.

"அய்யா சிலம்பத்துக்கு முன்னாலே எந்தக் காத்துக் கறுப்பு நிக்குன்றே?"

அழகான கணவனின் குழந்தைத்தனமான சேட்டைகளைப் பார்த்துத் திகைத்த ஸ்ரீதேவி, சிரிப்பை அடக்கிக் கொண்டாள். மரகதம் தலையில் தட்டிக் கொண்டாள்.

"பித்துக்குளிப்பய...."

கன்னியாகுமரி செல்லும் பஸ்ஸில் ஏறினார்கள். ஸ்ரீதேவி, இயற்கைக் காட்சிகளைக் காணும் போது, அவற்றின் எழிலில் மனத்தைப் பறிகொடுத்து, குழந்தையைப் போல் குதூகலித்தாள். தனிமையில் கணவனின் இனிய துணையானாள். ஒரு விஷயம் அவளுக்குப் புதிராக இருந்தது. அவளைப் போல் அவனால் எதிலும் ஒன்ற முடியவில்லை. 'புதிது புதிதாக ஏதாவது செய்து அவளைக் கவர வேண்டும்' என்பதே அவன் குறிக்கோள் போலிருந்தது. சில சமயம் அவளுக்கு மகிழ்வூட்டிய அவன் குறும்புகள், சில சமயம் சலிப்பை அல்லது திகைப்பை ஏற்படுத்தின.

கூட்டமில்லாத பஸ்களைத் தவிர்த்து விட்டு, கூட்டமான டவுன் பஸ்ஸினுள் அவளை ஏற்றி விட்டு, அவளுக்கு அரண்போல் வளைத்துக் கொண்டு, அவன் ஃபுட்-போர்டில் பயணம் செய்த போது, அவளுக்குக் கூச்சம் பிடுங்கித் தின்றது. தன்னைச் சுற்றி நின்ற அன்னியரின் ஸ்பரிசம், முட்களைப் போல் அவளுக்கு வேதனையளித்தது. இதற்கெல்லாம் பழக்கப்பட்டிராத அவள், "ஒரு புறம் பணத்தைத் தண்ணீர் போல் செலவழிக்கும் அவன், இந்தக் கஷ்டத்தையெல்லாம் வேண்டுமென்றே வரவழைத்துக் கொள்வது எதற்காக' என்று புரியாமல் தவித்தாள். முதலில் தயங்கினாலும், அவனிடம் கேட்டு விட்டாள்.

"இதிலெல்லாம் ஒரு 'த்ரில்' இருக்கு. நீ சினிமாலே பார்க்கலே?"

'என்ன மனிதன் இவன்? ஓர் உண்மையான மனைவியின் உணர்ச்சிகளுக்கு எந்த மதிப்பும் கொடுக்காமல்... எப்போதுமே விளையாட்டு தானா?'

கன்னியாகுமரியை அடைந்து, கடற்கரைக் கருகில் ஒரு ஹோட்டல் அறையை எடுத்துக் கொண்டார்கள். உணவருந்திவிட்டு, மாலையில் கடற்கரைக்குச் சென்று, கடலில் சூரியன்

மறையும் காட்சியைக் கண்டு களித்தார்கள். மறுநாள் குளித்து, குமரி அம்மனை தரிசனம் செய்தார்கள். படகில் ஏறி விவேகானந்தர் பாறையை அடைந்தார்கள். புகைப்படங்கள் எடுத்துக் கொண்டார்கள். நாளெல்லாம் அலைந்து விட்டு, மாலை அறைக்கு வந்து விழுந்தார்கள்.



இரவு மணி பதினொன்றிருக்கும். தன் போர்வைக்குள் சுருண்டு தூங்க ஆரம்பித்திருந்த ஸ்ரீதேவியை எழுப்பினான் சரவணன்.

"வா! கொஞ்சம் வெளியே போகலாம்...."

''என்னங்க இது? இந்த நேரத்துலே....?"

"என்ன பயம்? நான் இருக்கேன் இல்லே? சில கடையெல்லாம் கூட தெறந்திருக்கு பாரு...."

"வேணாங்க... அத்தை கூட சொன்னாங்க இல்லே?"

"வயசானவங்க அப்படித்தான் சொல்லுவாங்க. நீ பட்டிக்காடுன்னுதான் நெனச்சேன். பயந்தாங்குள்ளியாவும் இருக்கியே? இந்த மாதிரி பீச்சும், பௌர்ணமியும் சேர்ந்து கெடைக்குமா? எத்தனை தடவை இந்த மாதிரி கற்பனை செஞ்சே சந்தோஷப்பட்டிருக்கேன் தெரியுமா?"

நடைபாதை வியாபாரிகள் மூட்டைகட்ட ஆரம்பித்திருந்தனர். மேலே செல்லச் செல்ல, ஆள் நடமாட்டம் குறைந்து கொண்டே வந்தது. ஓரிடத்தில் அவளை அமரச் செய்து, அவளை ஒட்டி அமர்ந்தான். சிறிது நேரம் அவள் மடியில் படுத்துக் கொண்டு, வானத்தில் பிரகாசமாகச் சிரித்துக் கொண்டிருந்த சந்திரனை உற்று நோக்கியவாறே, ஒருவித போதையில் ஆழ்ந்தான். அவள் உணர்ச்சிகள், அவன் உணர்ச்சிகளுக்கு மாறாக இருந்தன. பீதியினால் அவள் முகம் வெளுத்தது.

"நாம போயிடலாங்க. எதுக்குங்க இங்கே? எனக்கு பயமா இருக்குங்க...."

தன் முகத்துக்கு வெகு அருகில் தெரிந்த ஸ்ரீதேவியின் முகம், பேயைக் கண்டது போல் ஏன் இப்படி மிரள்கிறது? கையைத் தனக்குப் பின்னால் நீட்டியபடி, அவள் ஓர் அலறலுக்கு ஆயத்தமாகி, தன்னை அடக்கிக் கொள்வது ஏன்?

பின்னால் திரும்பிப் பார்த்தான் சரவணன்.



## அருள்வாக்கு

இமயமலை மகா பெரியதாக இருக்கலாம்; கடுகு சின்னஞ்சிறியதாக இருக்கலாம். ஆனால் இமயமலைக்குள் இருக்கிற அத்தனை அவயவங்கள் கடுகுக்குள்ளும் இருக்கும். கடுகைக் கூட அப்படிப் பிரித்துக் கொண்டே போகலாம். கடைசியில் ஓர் அணு வந்து நிற்கும். அப்புறம் பிரிக்க முடியாது. சர்வ வியாபகமாக, இத்தனை அண்டசராசரங்களாகப் பிரிந்திருக்கிற சிவ சக்தியைப் பிரிக்க முடியாமல் ஓரிடத்தில் பார்க்க வேண்டும் என்றால் அது அவர்களது அன்பு ஊற்றெடுக்கிற இருதயத்தில்தான். பலவாக அவர்களிடமிருந்து விரிந்திருப்பதெல்லாம் ஒன்றாகக் குவிகிறது, இந்த அன்பு என்கிற அணுவில்தான்.

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ(து) ஆரும் அறிகிலார்
அன்பே சிவமாவ(து) ஆரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே

தெளிவாக கத்திகளுடன், இரண்டு கரிய மனித உருவங்கள், நெடிதுயர்ந்து நின்றிருப்பதைக் கண்டான்.

"ம்... எடுங்க...." அவற்றின் கைகள் நீண்டன.

"அவரை ஒன்னும் செஞ்சுடாதீங்க...." அழுது கொண்டே தன் நகைகளைக் கழற்றிக் கொடுத்தாள் ஸ்ரீதேவி. கத்தி முனையில் சரவணன் தன் வாட்ச், மைனர் செயின், மோதிரங்களை இழந்தான்.

"இன்னும் பாக்கியிருக்குதே...." அவர்கள் சுட்டிக்காட்டிய அவள் தாலிக் கொடியை, சரவணனே கழற்றி அவர்களிடம் கொடுத்தான். ஓர் ஓட்டத்துக்குத் தயாராக இருவரும் எழ முயற்சித்தனர்.

"என்னம்மா அவசரம்? இப்பத்தானே ஆரம்பிச்சிருக்கோம்!" - தன்னை நெருங்கிய அந்த அரக்கர்களின் கால்களைப் பற்றிக் கொண்டு கதறினாள் ஸ்ரீதேவி.

"நான் ஒங்க தங்கச்சி மாதிரி. வேணாங்க."

"எவனாவது ஏமாந்தவன்கிட்டே போய்ச் சொல்லு."

விகாரமான சிரிப்புடன் செயல்பட்டனர். ஓர் அழகிய கோலம், சில நிமிடங்களில் அலங்கோலமாக்கப்பட்டது.

ஆத்திரம் சரவணனை அக்கினியைப் போல் எரித்தது. எனினும், கண்ணுக்கு முன் பளபளத்த கத்திகளும், மாமிச மலைகள் போல் தோன்றிய உருவங்களின் வலிமையும், அவனது மாயா வீரத்தை மாயமாக மறைத்து விட்டன. அவன் ஜம்பமடித்துக் கொள்ளும் எந்தச் சண்டை முறையும் அவன் நினைவுக்குக் கூட வரவில்லை. எல்லாவற்றிலும் நடிகர்களை 'இமிடேட்' செய்யும் அவனால், ஒரு திரை நாயகனைப் போல் பாய்ந்து, பறந்து, எதிரிகளை வீழ்த்தி தன் அருமை மனைவியைக் காப்பாற்ற முடியவில்லை. கை, கால்கள் வலுவிழந்து, தொய்ந்து, கையாலாகாதவனாய், எதிரே தன் அழகு மனைவி சூறையாடப்படுவதை, கண்ணீருடன் பார்த்துக் கொண்டிருந்தான் சரவணன்.

சம்பவம் நடந்த வினாடியிலிருந்தே பேச்சு, மூச்சற்றுப் போனாள் ஸ்ரீதேவி. பிரமை பிடித்தவள் போல... ஒரே திக்கில் பார்வை... உணர்வு இல்லாமல்....

பெரும் கலக்கத்துடன், அவளைக் கைத்தாங்கலாக ஏந்தியபடி ரயில் ஏறினான் சரவணன்.

அன்னியன் மேலே பட்டாலே, நெருப்பு மாதிரி இருக்கிறது என்றாளே? இவளுக்குத் தெளிவு பிறந்ததும், இவள் முகத்தில் எப்படி விழிப்பது? இவள் என்னிடம் எப்படி நடந்து கொள்வாள்? ஒரு புழுவைப் பார்ப்பது போல் பார்ப்பாளா? அம்மா கேட்கப் போகும் கேள்விகளுக்கு என்ன பதில் சொல்வது?

நினைத்து நினைத்துக் குழம்பினான். மண்டை வெடித்து விடும் போலிருந்தது. தற்கொலை எண்ணம் கூடத் தலை தூக்கியது.

மகன் கைத்தாங்கலாய் அழைத்து வந்த மருமகளைக் கண்டதும் பதறினாள் மரகதம். "கண்ணம்மா! ஒனக்கு ஒடம்பு சரியில்லையா?"

பதிலேதும் கூறாமல் எங்கோ வெறித்தாள் ஸ்ரீதேவி. மஞ்சள் கோத்த தாலிக் கயிறு புடவைக்கு வெளியிலேயே தொங்கியது. மூளியாக இருந்த அவள் கழுத்து, கை, காது... மரகதத்துக்கு பகீரென்றது.

"என்னடா ஆச்சு? எப்படி இருந்தவ இப்படி வந்து நிக்கறா? நகையெல்லாம் பறிகுடுத்துட்டீங்களா? அதான் இப்படி பிரமை பிடிச்சு நிக்கறாளா? எங்கேடா நடந்தது இந்த மாதிரி?"

**அப்புறம் நம் மனசும் நாலாயிரம் திசையில் ஓடாது; அன்பிலேயே முழுக்க கரைந்து அன்பாகவே ஆகிவிடும். அருணகிரிநாதர் பெற்ற அனுபூதி இதுதான்.**

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

## சாதனை புரிவதில் விடாமுயற்சி

**முத்துக் குளிக்கும் போது கடலில் ஒரு முறை மூழ்கியவுடன் முத்து கிடைக்கவில்லை என்றால் கடலில் முத்துக்களே இல்லை யென்று நீ முடிவு செய்யாதே. கடலில் புதைந்து கிடக்கும் முத்துக்கள் எண்ணற் றவை. அதேபோல், பக்திக்குரிய சில சாதனை களைச் செய்தவுடனே கடவுளைக் காணா விடில் நீ உற்சாகத்தை இழக்காதே; பொறுமை யாக சாதனைகளைச் செய்து வா; தகுந்த காலத்தில் உனக்கு இறையருள் கிடைக்கும் என்பது நிச்சயம்.**

— பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர்.

சரவணன் தலை குனிந்தான்.

"எல்லாம் போயிடுச்சும்மா... எல்லாம்!"

அழுதபடி முழுவதும் சொன்னான்.

"பாதி ராத்திரி பீச்சுக்கு நீ கூப்பிட்டே. அவ சந்தோஷமா வந்தாளா?"

சரவணன் குற்ற உணர்வுடன் தலை குனிந் தான்.

"எனக்குத் தெரியும். அவ மறுப்பு சொல்லி யிருப்பா. நீ வாயாலே வீரமா பேசி, அவளை அடக்கியிருக்கே. இல்லே?"

சரவணன் தலையை அசைத்தான்.

"சரி.. இப்போ என்ன செய்யப் போறே?" தாயின் முகபாவனையிலிருந்து அவள் எண்ணத் தைச் சரவணனால் புரிந்து கொள்ள முடிய வில்லை. பழைய தலைமுறையைச் சேர்ந்தவள். இவ்வளவும் நடந்த பிறகு, அந்த மருமகளை எப்படி ஏற்றுக் கொள்வாள்?

"நடந்ததை ஒரு மாதிரியா சொல்லி, அவங்க வீட்டுலே அவளை விட்டுட்டு வந்துடட்டுமா? இவ இப்படி இருக்காளே? என்ன செய்யறது?"

"ஒரு மாதிரியான்னா? எப்படி? இதுலே ஒன் தப்பு எதுவும் இல்லாத மாதிரியா? ஒன்னோட ஒருவாரம் சுத்திட்டு வந்தப்புறம், இவ இப்படி இருக்கா. அவங்க நம்ம கையிலே இவளை ஒப் படைச்சப்போ, இப்படியா இருந்தா? தங்கம் மாதிரி ஜொலிச்சாளே? துறுதுறுப்பும், புத்திக் கூர்மையும் அவ கண்ணுலே டாலடிச்சுதே? பதவிசு எப்படி? கொலுசுக்கு மேலே அவ காலை, வேலை செய்யறப்போ கூட, நான் இத் தனை நாள் பார்த்ததில்லையே? இத்தனையும் இல்லே தொலைச்சுட்டு வந்திருக்கே? கடைலே உத்தரவாதத்தோட வாங்கின பொருளைக் கூட, நம்ம அஜாக்கிரதையாலே பழுது வந்திச்சுன்னா, திருப்பிக் குடுக்க முடியாது. எந்த மூஞ்சியை வெச்சுகிட்டு, அவளைக் கொண்டு விடுவே?"

"இல்லேம்மா... இந்த நிலைலே நீங்க... அவளை..."

"என்னை விடு. நான் செத்துட்டேன்னு வைவி. ஒரு புருஷனா இருந்து நீ என்ன செய்வே? அதைச் சொல்லு..."

"ஒன்னும் புரியலேம்மா. ஒரே குழப்பமா இருக்கு..."

"ஏன்? நீ பார்த்த சினிமாலே இது மாதிரி எதுவும் வரலியா? வெக்கமாயிருக்குடா ஒன் னைப் புள்ளைன்னு சொல்லிக்க... குத்தவாளி நீ... பரிகாரம் நீதாண்டா தேடணும்... ஒரு பொம்பளை டாக்டர்கிட்டே அவளை அழைச் சுட்டு போ. மொதல்லே ஒடம் புக்கு.. அப்புறமா மனசுக்கு வைத்தியம் பண்ணு. அவளைப் பழையபடி ஆக்கு. அப்புறமா, அவ ஒன்னை மன்னிக்கறாளா, ஏத்துக்கறாளான்னு பாரு. இதெல்லாம் நடந்துச்சுன்னா, இந்த வம்சம் வெளங்கட்டும்."

சரவணன் தாயைப் பிரமித்து நோக்கினான்.

"என்னடா பார்க்குறே? அம்மா, மாமியாரு... இதுக்கெல்லாம் மேலே நான் ஒரு உண்மையான பொம்பளைடா.... ஒரு அப்பாவிப் பொம்ப ளையை நாசமாக்கிட்டு, இந்த வம்சம் தழைக் கவே வேணாம். எனக்கு நீ 'மவன்'கிறது எவ் வளவு நிச்சயமோ, அவ்வளவு நிச்சயம் 'அவ தான் எனக்கு மருமவ'ங்கறது...."

தன் மனம் மூன்று நாட்களாக சாக்கடை போல் குழம்பித் தவிக்கிறது. போன தலை முறையைச் சேர்ந்த இந்தப் பட்டிக்காட்டு அம்மா, எவ்வளவு சீக்கிரம் இந்த பிரச்னைக்கு ஒரு தீர்வு கண்டு, அதில் ஆணித்தரமாக நிற் கிறாள்? எவ்வளவு எச்சரித்தாள் நம்மை? அவள் குறிப்பிட்ட 'காத்து - கறுப்பு' இதெல்லாம், மனித உருவில் நடமாடும் இத்தகைய தீய சக்திகள் தானா? இல்லை, இம்மிருகங்களை விட அவை கொடியவையாக இருக்க முடியுமா?

"அம்மா! டாக்டர்கிட்டே போக ஆட்டோ கூட்டிட்டு வரேன்... அவளைத் தயார் செஞ் சுடுங்கம்மா..."

# ஸ்ரீராம் வழங்கும் 12 நாள் வண்ணத் திருவிழா!

**22 செப்.'95 முதல் 3 அக்.'95 வரை**

## ஸ்ரீராம் வண்ணம் சேர்த்து

ஒன்று முதல் பத்து லட்சம் வரை உங்களை எண்ணும்படி சொன்னால் என்ன செய்வீர்கள்? அப்படியே பிரமித்துப் போய் விடுவீர்கள். ஆனால், ஸ்ரீராம் அவ்வாறு எண்ணியிருக்கிறது. அதுமட்டுமல்ல. பத்து லட்சம் வாடிக்கையாளருக்கு ஒருவர்விடாமல் சேவை அளித்தும் வருகிறது.

ஒவ்வொரு நாளுமே பரிசுத் தொகையாக ரூ. 11/2 கோடி வரை விநியோகிக்கிறோம். பதிலுக்கு, மனநிறைவு பெறும் வாடிக்கையாளர்கள், அதனால் தாங்கள் பெருமிதம் கொள்வதைத் தெரிவிப்போடு எங்கள் நேர்மை தவறாத நடைமுறைகளைப் பாராட்டவும் செய்கிறார்கள்.

இப்போது இந்த 12 நாள் வண்ணத்திருவிழாவில் எங்களுடன் சேர்ந்து பங்கேற்க உங்களை அன்போடு அழைக்கிறோம்.

ரூ. 75,000 வரையில் உள்ள சீட்டுகளை எடுப்பவர்களுக்கு, பொதுத்துறை அல்லது தனியார்துறை அல்லது அரசுப்பணி அல்லது அங்கீகாரம் பெற்றுள்ள நிறுவனங்கள் ஆகியவற்றில் பணிபுரியும் நிர்ணயிக்கப்பட்ட ஊதியம் பெறும் மூன்று பேர் உத்தரவாதம் அளித்தால் போதுமானது. வேலையில் இருக்கும் பெண்மணி ரூ. 15,000 வரையில் உள்ள சீட்டுகளை எடுக்கும் போது அவருடைய கணவரின் உத்தரவாதமே போதுமானது.

மகிழ்ச்சி பெற வாருங்கள். பரிசு பெற வாருங்கள்.

### சந்தாதாரர் பரிசு

| வ.எண் | சீட்டு மதிப்பு | சந்தாதாரர் பரிசு |
|---|---|---|
| 1 | 250 x 40 = 10,000 | S.S. ஃப்ரூட் ப்ளேட் |
| 2 | 500 x 30 = 15,000 | 5 கிராம் வெள்ளிக்காசு |
| 3 | 625 x 40 = 25,000 | S.S. பௌல், மூடியுடன் |
| 4 | 500 x 60 = 30,000 | செல்லோ ஹாட் லஞ்ச் பேக் (3 ஸ்டார்ஸ்) |
| 5 | 1,000 x 50 = 50,000 | S.S.C.B. டீப் கடாய் |
| 6 | 2,500 x 30 = 75,000 | S.S.C.B. ஸ்டூ அண்ட் செர்வ் |
| 7 | 2,500 x 40 = 1,00,000 | S.S.C.B. க்ளாஸிக் ஸாஸ் |
| 8 | 5,000 x 30 = 1,50,000 | H.M.A.C. மில்க் பேன் |
| 9 | 5,000 x 40 = 2,00,000 | S.S.C.B. இட்லி குக்கர் |
| 10 | 10,000 x 30 = 3,00,000 | 2 கிராம் தங்கக்காசு |
| 11 | 20,000 x 25 = 5,00,000 | 4 கிராம் தங்கக்காசு |

* நுழைவுக்கட்டணம் த


1


2


3


4


5


6


7


8


9


10

உங்களை அன்போடு அழைக்கிறது...

# உங்கள் வாழ்க்கையை ஒளிபெறச் செய்யுங்கள்




## மகிழ்ச்சியின் பாதையை நண்பருக்கு அறிமுகம் செய்யுங்கள்

ஸ்ரீராம் சிட்டு சந்தாதாரராக ஆவது மகிழ்ச்சி. ஒவ்வொரு முறையும் பயனுள்ள அழகிய பரிசுகளைப் பெறுவது மகிழ்ச்சி. கவலையும் சிரமமும் இல்லாத எதிர்காலத்துக்கு வழி காண்பது மகிழ்ச்சி.

இத்தகைய மகிழ்ச்சியின் பாதையை உங்கள் நண்பருக்கு அறிமுகம் செய்யுங்கள்.

ஏற்கெனவே உங்களுக்கு நாங்கள் அனுப்பியிருந்த மடலின் மூலம் ஒரு நீல நிற வளையம் கிடைத்திருக்கும். அதனை ஸ்ரீராம் கிளையில் அளிக்கும் போது ஒரு பரிசுப்பொருளும் ஒரு சிவப்பு வளையமும் உங்களுக்குக் கிடைக்கும்.

அடுத்ததாக உங்களை வந்தடையும் மடலில் உங்கள் வளமைக்கு வண்ணம் சேர்க்கும் மர்மக் கூப்பன் ஒன்றும் இடம் பெறுகிறது. அதன் மூலம் மூன்றாவதாக ஒரு வளையம் உங்களுக்குக் கிடைக்கவிருக்கிறது. எனவே, ஒரு புதிய சந்தாதாரரை நீங்கள் அறிமுகம் செய்யும்போது, இந்தக் கூப்பனையும் அளியுங்கள். உடனே உங்களுக்கு ஒரு காப்ஸ்யூல் தரப்படும். அதனை வெட்டும்போது மூன்றாவது வண்ண வளையம் உங்களுக்கும் கிடைக்கும். மற்ற இரண்டு வண்ண வளையங்களோடு இதனையும் ஒட்டுங்கள். பரிசு பெற்று மகிழுங்கள்.




அறிமுகப்படுத்துவோர் பரிசு இப்போதுள்ள சந்தாதாரர்களுக்கு மட்டுமே.

**Shriram** Group Companies
ALL INDIA DEPOSIT MOBILISATION DRIVE IS ON.




முன் அங்கீகாரம் பெறப்பட்டது.

**ஸ்ரீராம்** சிட்ஸ் &
இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பி. லிமிடெட்.

**ஸ்ரீராம்** சிட்ஸ்
தமிழ்நாடு பி. லிமிடெட்.

நிர்வாக அலுவலகம்: "சுப்பிரமணியம் பில்டிங்,"
1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை - 600 002.
போன் : 8520700/8523932/8522651/
8525536/8520797



*ஸ்ரீராம் சிட்ஸ் —*
*உங்கள் வளமைக்குப் பாதை.*

ADWAVE/SCI/5127 TAM B

# அறிவியல் நோக்கில் ஆன்மீகம்!



• டாக்டர் பிரணவ் பாண்டியா



• ஸ்ரீராம் சர்மா ஆசார்யா

இட்டத்தட்ட ஒரு லட்சத்து இருபத்தைந் தாயிரம் இலவசத் திருமணங்கள் நடத்தியிருக் கிறார்கள்; இருபத்தைந்து லட்சம் மரக்கன்றுகள் நட்டிருக்கிறார்கள்; நாடெங்கும் சுய வேலை வாய்ப்பு, குடிசைத் தொழில்களைத் தொடங்கி உற்சாகமாக நடத்தி, மேற்பார்வை இட்டு வரு கிறார்கள்; சுமார் ஐந்து லட்சம் பேர்களை புகை - மது உள்ளிட்ட போதைப் பழக்கத்தி லிருந்து மீட்டு மறுவாழ்வளித்திருக்கிறார்கள்; இமய மலையிலிருந்து சுமார் மூன் னூறு மூலிகைச் செடி



• கூட்டமாக தியானம் நடக்கிறது....

களைக் கொண்டு வந்து, தோட்டம் அமைத்து, மருந்துகள் தயாரித்து இயற்கை மருத்துவம் செய்கிறார்கள்!

யார் இவர்கள்?

'காயத்ரி பரிவார்' என்கிற இந்த அமைப்பு, வட இந்தியாவில் இன்று மிகப் பிரபலம்!

1911 ல், சுதந்தரப் போராட்ட வீரர் பண்டிட் ஸ்ரீராம் சர்மா ஆச்சார்யா என்பவர் ஹரித்வார் அருகே 'சாந்தி குஞ்ச்'சில் தொடங்கிய இந்த ஆன்மிக - சமூக இயக்கம், இன்று அவரது சீடரான டாக்டர் பிரணவ் பாண்டியாவின் தலைமையில் மக்கள் பணியில் சாதனை படைத்து வருகிறது!

ஆன்மிக இயக்கமாகத் தொடங்கி, சமூகப் பணியில் தன்னை ஐக்கியப்படுத்திக் கொண்டா லும் இன்றும் தியானம், பிராணாயாமம் போன்ற வற்றை விட்டுவிடவில்லை இவ்வமைப்பு.

காயத்ரி மந்திரத்தை, 'இருபத்து நான்கு வார்த்தைகள் கொண்ட ராஜ மந்திரம்' என்று குறிப்பிட்டு, கூட்டமாக அதை ஜபிக்கிறார்கள்!

இதில் இன்னொரு விசேஷம் - தியானத் துக்கு முன்னும் பின்னும் தவறாமல் மருத்துவப் பரிசோதனைக்கு உட்படு கிறார்கள். சுவாசம், ரத்த ஓட் டம், மூளை இயக்கம் இப்படி முக்கிய இயக்கங்கள் எப்படி மாறுபடுகின்றன என்பதைக் கணக்கெடுத்து செம்மைப் படுத்துகிறார்கள்!

காயத்ரி மந்திரத்தை தியான மாகச் செய்வதன் மூலம் உடலில் பல நல்ல வியத்தகு மாற்றங்கள் தெரிவதையும் கண்டுபிடித்திருக்கிறார்கள்!

யாகங்களிலிருந்து எழும் புகையை விஞ்ஞான ரீதியில் பரிசோதித்தல், 'உன்னையே நீ அறி வாய்' என்ற தத்துவ முறைப்படி கண்ணாடி முன் நின்றும், கோஷ்டியாகவும் தியானம் செய் தல் ஆகியவை நடைபெறுகின்றன. ஆன்மிகத்தை அறிவு பூர்வமாக அணுகப் பயிற்றுவிக்கிறார்கள்.

எல்லாம் சரி, காயத்ரி மந்திரத்தைப் பெண்கள் சொல்லக் கூடாது என்கிறார்களே?

பிரணவ் பாண்டியா சொன்னார் : "யார் சொன்னது? புராணத்தில் காயத்ரி மந்திரம் சொல்லிப் பயனடைந்த பெண்களைப் பற்றி நிறைய தகவல்கள் உள்ளன. இட்டத்தட்ட கி.பி. 500க்குப் பிறகு தான் 'பெண்கள் காயத்ரி சொல்லக் கூடாது' என்கிற தவறான கருத்து பரப்பப்பட்டிருக்கிறது!"

'காயத்ரி பரிவார்' கூடிய சீக்கிரம் தென் னிந்தியாவிலும் கிளை பரப்ப வருகிறது. முதல் கிளை மதுரையில் என்கிறார்கள்.

— பி. எஸ். பி.

# சின்முத்ரா

உங்கள் முதலீட்டிற்கு பூரண பாதுகாப்பை அளிக்கும் ஒப்பற்ற நிதி நிறுவனம்

## சங்க நிதி

உங்கள் முதலீட்டிற்கு

**24%**

வருட வட்டியை வழங்குகிறது.

**எங்களது சிறப்பு அம்சங்கள்**

- குறைந்த பட்ச முதலீடு ரூ.5,000/-
- டெபாசிட் செய்வோருக்கு 3% ஊக்கத் தொகை
- அறிமுகப்படுத்துவோருக்கு 1% ஊக்கத் தொகை
- பென்சன்தாரர், வயது முதிர்ந்தோர், அறக்கட்டளை ஸ்தாபனங்களுக்கு 1.5% ஊக்கத் தொகை அளிக்கிறது.

வட்டிக்கும் அசலுக்கும் பின்தேதியிட்ட காசோலைகள் முன்னதாக வழங்கப்படும்

## 'பத்ம நிதி'

'பத்ம நிதி' வைப்பு நிதி பத்திரத்தில் முதலீடு செய்யுங்கள் !

குறைந்தபட்ச முதலீடு
ரூ.10,000/-

காலம்
36 மாதங்கள்

திரும்பப் பெறும் தொகை
ரூ.20,000/-

RUSH FOR
ATTRACTIVE &
REMUNERATIVE SCHEME
SUITS FOR ALL
ரூ. 250 பிரதி மாதம் 18 மாதங்களுக்கு மட்டும் செலுத்துவீர்.
தங்க புதையலை வென்றிடுவீர்

எங்கள் சேமிப்பு திட்டத்தில் சேர்ந்து தங்கள் தேவையை பூர்த்தி செய்து கொள்ளும் எளிமையான திட்டங்கள் காலம் 20 மாதம் மாதம் ரூ.500/ சேர்ந்து 2 மாதம் ஆனவுடன் ரூ.5000 வரை கடன் பெறும் வசதி.

கடனுக்கு வட்டி ஏதும் இல்லை.

## சின்முத்ரா ஃபைனான்ஸ் அண்டு இன்வெஸ்ட்மேண்ட்ஸ்



*112, முதல் மாடி, இராமகிருஷ்ண மடம் சாலை,*
*(இராணி மெய்யம்மை உயர்நிலைப் பள்ளி எதிரில்)*
*மந்தைவெளி, சென்னை - 600 028.*
*(ஞாயிறு விடுமுறை)*

*சின்முத்ரா - உங்கள் வளர்ச்சிக்கான பாதை !*

9

# இருட்டு அரண்மனைகள்

கி. ராஜேந்திரன்

சின்னிக்கு 'போர்' அடித்தது. 'நான் என்ன குழந்தையா? ஸீ-ஸாவும் சறுக்கு மரமும் விளையாட?' என்று நினைத்துக் கொண்டே நடந்தான். அரண்மனை போன்ற பிரதான கட்டடத்துக்குப் பக்கவாட்டில் பேரி தோப்பு வழியே சென்ற பாதையில் கால்கள் அழைத்துப் போக, மீன் குழம்பு வாசனை நாசிகளைத் தாக்கியது.

அதனால் கவரப்பட்டுச் சென்றவனை உயரமான இன்னொரு கட்டடம் எதிர் கொண்டது. நகர்ப்புறங்களில் பிரபலமாகி விட்ட ஃப்ளாட் ஸிஸ்டம் போல நாலு அடுக்குகளில் பன்னிரண்டோ, பதினாறோ குடியிருப்புகள். அவற்றுள் ஒன்றிலிருந்துதான் கமகம!

தொழிலாளர்களுக்கான குடியிருப்பு. சூரியா சுவாமி, ஆசிரமத்தின் கட்டடங்களிலும் சுற்றிலுமுள்ள தோட்டம் தோப்புகளிலும் பணி புரிபவர்களை நன்றாகத்தான் வைத்துக் கொண்டிருக்கிறார். "வா தம்பி" என்றது ஒரு முதியவரின் குரல். "காட்டேஜுக்கு வழி காட்டணுமா?"

"வேண்டாம்" என்று தலையசைத்தான். "சும்மா தான் சுத்தி பார்த்துக்கிட்டிருக்கேன்."

"தனியாவா வந்திருக்கே?"

"இல்லே, அப்பாவோட. அவர் குருஜி கிட்ட பேசிட்டிருக்காரு. பொழுது போலே... ஏரி மீனா?"

"பின்ன, இங்க கடல் மீன் ஏது?"

"வாசனைலயே வித்தியாசம் தெரியுது."

"சாப்பிட்டுப் போகலாம்."

எளியோருக்கே உரிய பண்பாடு உபசரித்தது. "ஏ புள்ளே, சோறு ரெடியா?"

"அஞ்சு நிமிட்ல தயாராயிடும்."

"குருஜி கூட அசைவமா?"

"பேசப்படாது! நாங்க கூட மட்டன், கோழி தொடறதில்லே. மீன் மட்டும். அதுவும் எப்பணாச்சும் ஒருக்கா... உள்ள வா, உட்காரு."

தயங்கினான். "அப்பா தேடிட்டு வருவாரு."

"அவரும் சாப்பிடலாம். சூர்யாசாமி கருணைல சோறுக்குப் பஞ்சமில்லே."

"அப்பாவுக்கு இதெல்லாம் பிடிக்காது. நான் கை நனைச்சதா தெரிஞ்சா என்னையும் திட்டுவாரு."

"அப்பவே நினைச்சேன், ஆளைப் பார்த்தா நம்ம முகமா இருக்கு; ஆடையைப் பார்த்தா வித்தியாசமா தோணுதேன்னு."

"வளர்ப்பு மகன்."

"இப்பல்லாம், பெத்ததைவிட வளர்ப்புகளுக்குத்தான் யோகம். வா. ஏதோ ஆசைப்பட்டுட்டே. சாப்பிடு. சீக்கிரம் கிளம்பிடலாம், அப்பா வரத்துக்குள்ளே."

வெட்டினான். சூடாக... சுவையாக... ஏப்பம் கால் கிலோ மீட்டருக்கு நீண்டது. 'அப்பா நிச்சயம் மோப்பம் பிடித்து விடுவார்' என்று நினைத்தான்.

வாசலில் குரல் கேட்டது; "ஏம்பா இந்தப் பக்கம் சின்னின்ற பையன் ஒருத்தன் வந்தானா?"

சின்னியைத் தேடி இன்பசாகரன் புறப்பட்ட போது இருள் கவிந்து, வானத்து நட்சத்திரங்கள் சமவெளியை விடவும் இன்னும் பக்கத்தில் இருப்பது போல் பிரகாசமாகத் தோன்றின. தோப்பில் பேரிகள் செழித்து வளர வசதியாக இடை இடையே நிறைய இடம் விட்டு நட்டிருந்ததால் வானச் சுடர்களின் ஒளி, வழி காட்டப் போதுமானதாய் இருந்தது. 'எங்கே போய்விடப் போகிறான்? இந்தப் பக்கம்தான் எங்கேயாவது திரிந்து கொண்டிருப்பான்' என்று பதைப்பை அடக்கிக் கொண்டு நடந்தான். 'விபரீதமாக ஒன்றும் நேர்ந்திருக்காது....'

வெகு சீக்கிரமே அவனுக்கும் மீன் வாடை முகத்தில் அறைந்தது. 'ஒருவனுக்கு வாசனை, இன்னொருவனுக்கு துர்நாற்றம்' என்று எண்ணியவாறு கைக்குட்டையால் மூக்கை மூடிக் கொண்டு ஊழியர் குடியிருப்பை

நெருங்கி விசாரித்தான்.

சின்னி நாடகமாடத் தயாரானான்.

"வாங்கப்பா. பென்ஜமின் பற்றிதான் விசாரிச்சிட்டிருந்தேன்."

'படவா ராஸ்கல்' என்று மனசுக்குள் அவனைத் திட்டிய இன்பசாகரன், "இன்னும் கொஞ்ச நாள் போனால் என் சம்பளத்துல பங்கு கேட்பே போலிருக்கே" என்று கூறிய படியே, பென்ஜமினின் கம்ப்யூட்டர் பட பிரிண்ட்-அவுட் ஒன்று எடுத்து கிழவன் பக்கம் நீட்டினான்.

"கம்ப்யூட்டர் படம் கண்றாவி, அப்பா. நீங்க போட்ட படம்தான் கரெக்டா பென்ஜமினை போட்டோ பிடிச்ச மாதிரி அமைஞ்சிருக்கு."

"என்னடா ஐஸ் வைக்கிறியா?"

"சேச்சே! ஊட்டில ஏற்கெனவே ரொம்ப குளிர். ஐஸே கிடைக்காது; வியாபாரமாகாது" என்ற சின்னி, தான் மடித்து பத்திரப்படுத்தியிருந்த வண்ணப்படத்தை எடுத்துக் காட்டினான்.

"கோவிந்தா! முருகேசு! ஆன்டொணி! காத்தவராயா!" என்று எல்லா குடியிருப்புகளிலுமிருந்த எல்லா குடும்பத் தலைவர்களுக்கும் ரிலே ரேஸ் போல தகவல் அனுப்பினான் மேஸ்திரி கிழவன்.

எல்லாரும் வந்தார்கள். பார்த்தார்கள். தலையசைத்து "தெரியாது" என்றார்கள். "சாமியைப் பார்க்க தினம் தினம் எத்தனையோ அயல் நாட்டுக்காரங்க வராங்க; நாங்க யாருன்னு கண்டோம்?"

"இவன் ஃபாரின் ஆளுன்னு நினைக்கிறீங்களா?"

"பார்த்தா அப்படித்தானே தெரியுது? வெளுப்பான முகம், நீலக்கண், ரிப்பன் கட்டின தலைமுடி. காதுல வளையம்..." எல்லாரும் இன்னொரு தடவை பார்த்தார்கள். மீண்டும் ஒரு முறை தலையசைத்து விட்டுப் போய்ச் சேர்ந்தார்கள்.

இன்பசாகரன் விடைபெற முற்பட்டபோது ஏதோ நினைத்துக் கொண்டவன் போல கிழவன் படத்தை மறுபடியும் வாங்கிப் பார்த்தான்.



"என்ன மேஸ்திரி, ஏதாச்சும் ஞாபகம் வருதா?"

"உம்... ஒரே ஒரு தடவை இங்க பங்களா வாசல்லதான் பார்த்த மாதிரி தோணுது. காரை விட்டு இறங்கி உள்ளே போனான். எனக்கு டியூட்டி நேரம் முடிஞ்சு வீடு திரும்பிட்டேன். முருகேசு சொன்னாப்பல எத்தனையோ பேர் சாமியை தரிசிக்க வராங்க; தனிச்சு பேசணும்னு கேட்டுக்கறாங்க; தங்கள் கஷ்டத்தைச் சொல்லி ஆசி வாங்கிட்டுப் போறாங்க. எல்லாரையும் ஞாபகம் வைச்சுக்க முடியுமா? இது கூட நான் பார்த்த ஆள்தானா இல்லையான்னு



AN ISSUE ON OUR ENVIRONMENT!

OCTOBER '95

GOKULAM

The monthly magazine for children

96 PAGES FOR JUST Rs. 5!

GOKULAM, EKKADUTHANGAL, MADRAS - 97.


சந்தேகமாத்தான் இருக்கு."

'எல்லாரும் ஒரே மாதிரி பேசுகிறார்கள்' என்று எண்ணினான். 'ஏன் சூரியாசுவாமியே பட்டத்தைப் பார்த்துவிட்டு ஏறத்தாழ இப்படித் தானே சொன்னார்.'

உள்ளேயிருந்து ஒரு பெண் வந்து அவனுக்கு டீ வைத்து விட்டுப் போனாள். ஆவி பறந்தது. "நம்ம வீட்ல சாப்பிட மாட்டீங்க; டீயாவது குடிங்க."

"பொண்ணா?"

"இல்லீங்க, மருமக."

"பையன் எங்கே?"

"ஊருக்குப் போயிருக்கான். சாமிதான் அனுப்பியிருக்காரு. பச்மாரின்னு ஒரு இடமாமே. அங்கே ஒரு ஆசிரமம் கட்டுறாராம். தோட்டம் போட அனுப்பியிருக்காரு. திரும்பி வர ஆறேழு மாசம் ஆகும்."

"உன் மகன் கைல பச்சை குத்தியிருக்கானா?"

'எதுக்கு இந்த கேள்வி?' என்பது போல் பார்த்தான் கிழவன். "ஊஹும். நமக்கு அதெல்லாம் பிடிக்காதுங்க" என்றான்.

"ஆமாங்க" என்றாள் பாப்பாவி உள்ளே இருந்து எட்டிப்பார்த்து. "எப்பவுமே நாங்க உதய சூரியனுக்குத்தான் வோட்டுப் போடறது."

மறுநாள் பகல் போதில் சுற்றி வந்த போது ஆசிரமத்தின் பிரதான கட்டடம் மேட்டிலே அமைந்திருப்பது தெரிந்தது. பின்புறம் சரிவில் இரண்டு அடுக்கு மாடி இருந்தது. ஆக மொத்தம் மூன்று அடுக்கு என்றாலும் முன்புறம் மூன்றாம் தளம் மட்டுமே கோபுர பாணியில் கம்பீரத் தோற்றம் தந்தது.

மழைக்காலத்தில் பின்புற வாசல் பயன்படும் என்றும் இரண்டாம் மாடியின் பெரிய கூடத்தில் பிரார்த்தனை, பஜனைகள் நடக்கும் என்றும் சொன்னார்கள். அடித்தளம் கிடங்காகப் பயன்பட்டு வந்தது. ஆசிரமத்துக்கு சொந்தமான நிலங்களில் பயிராகும் உருளை, பீன்ஸ், பேரி, ஆப்பிள் முதலானவை மார்க்கெட்டுக்குப் போகுமுன்னர் அங்கே குவிக்கப்படும். இன்னும் உர மூட்டைகள், கிழங்கு விதைகள் போன்றவை.

ஆசிரமத்தில் தங்குவதற்குப் பணம் வாங்குவதில்லை என்றாலும் அதன் நற்பணிகளுக்கு நன்கொடை தரலாம். சுற்று வட்டார கிராமங்களில் நிறைய சமூக சேவை நடக்கிறது. இன்பாவும் ஐநூறு தந்து ரசீது பெற்றான். அத்துடன் போக வர செலவு சேர்த்து ஸ்டேட்மெண்ட் தயாரித்தான். மேலதிகாரியை சந்தித்து கையெழுத்துக்கு நீட்டிய போது கடுகடுத்தார்.

"செலவு எல்லாம் தாராளமா பண்ணறே. என்ன சாதிச்சே?"

"ஒண்ணுமில்லே... இதுவரை...." என்று ஒப்புக் கொண்டான்.

"என்ன அப்படி சொல்லிட்டே, காதல் லீலைகளிலே கின்னஸ் சாதனையே நிகழ்த்தப் போறேன்னு எதிர் பார்த்திட்டிருக்கேன்" என்று கூறி, ஒரு பெரிய காகித உறையை டிராயரிலிருந்து எடுத்து வழ வழ மேஜை மேல் போட்டார். வழுக்கித் திறந்து கொண்ட அதனுள்ளிருந்து 10 X 8 என்லார்ஜ்மெண்டில் வண்ணப்படங்கள் எட்டிப் பார்த்தன.

ரஸியா அவனிடம் ஒண்டிக் கொண்டது; அழுத அவனை அணைத்து அவன் ஆறுதலாக முதுகு தடவியது; அவள் பிரிந்து சென்றது; மறுபடி ஓடி வந்து கழுத்தைக் கட்டிக் கொண்டது... சினிமா காட்சி போல அடுத்தடுத்த ஃபிரேம்களில்....

"லவ் பண்றதுதான் பண்றே, அதுக்கு ஒரு விவஸ்தை வேணாம்? இப்படியா நட்ட நடு வீதியில் டெமான்ஸ்ட்ரேட் பண்ணி தெருவோட போறவங்க வரவங்களுக்கெல்லாம் பாடம் நடத்தறது?"

"ஸார்! அறியாத பொண்ணு ஸார், பாவம்."

"யாருக்கு காது குத்தறே? குட்டிக்குதிரையாட்டம் நிக்குது; சமைஞ்சு ரெண்டு வருஷமாவது ஆகியிருக்கும்."

"அசிங்கமா பேசாதீங்க. மலர்ந்தும் மலராத

பருவம். வாழ்க்கை புரிஞ்சும் புரியாத மர்மம். அவளுக்கு எல்லாமே நிலவில் குளிப்பது போலத் தோணுது."

"என்னய்யா பழைய கண்ணதாசன் பாட்டெல்லாம் எடுத்து வுடறே? லேட்டஸ்ட் ஏதும் தெரியாதா?"

"யாரோ அயோக்கியப் பசங்க..." என்று கூறியபடியே புகைப்படங்களைக் கிழிக்கப் போனான்.

"நில்லு! நில்லு! படங்கள் எனக்கு வந்திருக்கு" என்று தடுத்தார். மேஜை மீது விட்டெறிந்தான்.

"இதைக் கிழிச்சுட்டா ஆச்சா? நெகடிவ் வைச்சிருக்கானே? உன் பெண்டாட்டி ஸ்கூல் அட்ரஸுக்கு ஒரு ஸெட் அனுப்பவான்னு கேட்டிருக்கானே? இந்தப் பொண்ணு ரவியாவோட பெற்றோருக்கும் அனுப்பித் தொலைப்பானே? விஷயம் பத்திரிகைகள்ல வரதுக்கு முன்னாடி நாம மேலிடத்துக்கு ரிப்போர்ட் அனுப்பிடறதுதான் நல்லது."

"செய்யுங்க. நாம எதையும் ஒளிச்சு வைச்சதா டில்லி நினைக்க வேண்டாம். ஆனா அவங்க நிலைமைய சரியா புரிஞ்சுக்கப் பண்ணுங்க. இந்த ஆளு யாராயிருந்தாலும் அவன் இப்படி என்னை பிளாக்மெய்ல் பண்றதிலிருந்தே அவன் என்கிட்ட பயப்படறான்னு தெரியுது. அவனை நான் நெருங்கிக் கிட்டு இருக்கிறதா நினைக்கிறான். இதுதான் நம்ம பலம்."

"நிழல் யுத்தம் நடத்திக்கிட்டே இருக்கே. கண்ணுக்குத் தெரியாதவன் முன்னே கையை மடக்கி பாறை போல மஸில்ஸ் காட்டுறே. என்ன பிரயோஜனம்?"

"நமக்கு அவனைத் தெரியாட்டாலும் அவனுக்கு நம்மைத் தெரியுதே ஸார்! நான் இந்தக் கேஸிலிருந்து விலகணும்னு எதிர்பார்க்கிறான். அதுக்கு பதிலா அவனை மேலும் நெருக்கினா பதற்றமடைஞ்சு மேலும் தப்பு பண்ணுவான். தன்னைத்தானே காட்டிக் கொடுப்பான்."

முறைத்தார். "இன்னும் ஒரு சான்ஸ் தரேன். மறுபடி இப்படி ஏதும் அசம்பாவிதம் நடந்தா, கேஸிலிருந்து உன்னை நீக்கி மணிரத்னத்துக்கிட்டே இன்வெஸ்டிகேஷனை ஒப்படைச்சுடுவேன்" என்றார்.

**வெ**றுப்புடன் வெளியேறினான்.. 'எல்லாம் அனுபமாவால் வந்த வினை. ஊட்டிக்கு என்னை அனுப்பி டிபார்ட்மெண்டுக்கு செலவு வைக்காமலாவது இருந்திருக்கலாம்' என்று அவள் மீது கோபம் வந்தது.

மொட்டை மாடியிலிருந்து பார்த்த போது அவள் வீட்டின் தோட்டத்தில் தென்னை மரத்தில் தலை கீழாக நின்று வாலாட்டி 'கீச் கீச்' என்று சத்தமிட்ட அணில் கூட தன்னைப் பார்த்து கேலி செய்வது போல்தான் இன்பாவுக்குத் தோன்றியது.

"தண்டத்துக்கு என்னை அலைக்கழித்தாய்" என்று குற்றம் சாட்டிய போது அனுபமா சிரித்தாள்.

"நான் தப்பு செய்யலாம், ஆனா விஞ்ஞானம் தப்பு செய்யாது. துப்பு துலக்கும் சாமர்த்தியம் உனக்குப் பத்தலேன்னா அதுக்காக விஞ்ஞானத்தைப் பழிக்காதே" என்றாள்.

"நான் விஞ்ஞானத்தைக் குறை சொல்லலே. உன்னைத்தான். என்னைப் பழி வாங்கக் காத்திருந்து இப்படி செய்துட்டே!"

"பழிவாங்கறதா? எதுக்கு?"

"உன் காதலை நான் ஏற்காததற்கு. மஹாபலிபுரம் ரூட்ல அந்த ஹாலிடே ரிஸார்ட்ல உன்னிடம் நான் முறை தவறி நடந்துக்கிட்டதுக்கு..."

அவள் மறுபடி சிரித்தாள். "அதற்குப் பழி வாங்கறதுன்னா இது மாதிரி சின்ன தண்டனையெல்லாம் போதாது."

"வேற?"

"இன்னொருத்தனை நான் காவிச்சா போதும். பொறாமையில வெந்து போயிடுவே!"

அது உண்மை என்று உணர்ந்ததாலேயே அவனுக்கு ஆத்திரம் அதிகரித்தது. "நல்லா காதலி! உன்னிடம் பரிசோதனைக்கு வந்து சேரும் பிரேதங்களில் ஒன்றை வேணுமானாலும் கல்யாணம் கட்டிக்க! என்னை மறந்து தொலை! நிம்மதியா வாழ விடு!"

"மனசைப் புண்படுத்தறதுக்கும் ஒரு அளவு இருக்கு. பிரேதங்களோட பழக நேர்ந்ததாலேயே நான் உணர்ச்சியற்ற ஜடமாயிருப்பேன்னு நினைக்காதே."

தான் அளவு மீறி கடுமையாகப் பேசியதை எண்ணி வருந்தினான். அவளை ஏறிட்டுப் பார்க்கக் கூசி திரும்பிய போது கீழே ஒரு செம்பருத்திச் செடி, ரோஸ் நிறத்தில் இரட்டை மலர்களுடன் மாலைக் கதிரவனின் அரவணைப்பில் நாணம் கொண்டு கன்னம் சிவந்த காதலி போல் காட்சியளித்தது.

அவள் வலக்கரம் அவன் வலது தோளில் பதிந்தது. சிரம் முதுகில் சாய்ந்தது. "இத பாரு இன்பா, உனக்கு என் உடலைத் தந்துதான் என் காதலை நிரூபிக்கணும்னா, அதுக்கும் இப்ப, இத்தனை ஆண்டுகள் கழித்து, நான் தயாராயிருக்கேன்" என்றாள்.

(தொடரும்)

லார்ட் செஸ்டர் ஃபீல்டிடம் ஒருவர், "கடவுளின் படைப்பில் மனிதன் ஒருவன்தான் சிரிக்கும் தன்மை பெற்றிருக்கிறான்" என்றார்.

"உண்மைதான்; சிரிப்புக்கு உள்ளாகிறவனும் அவன்தானே!"

— இது செஸ்டர் பீல்டின் பதில்.

'சிரித்து மகிழுங்கள்' நூலிலிருந்து : எஸ். எஸ். பூங்கதிர்



# கல்கி

# தீபாவளி மலர்'95



• ராதா கல்யாண உத்ஸவம் (வண்ணப்படம் : யோகா)

கண்ணனின் கம்பீரமும்
ராதையின் ரம்மியமும்
இணைந்த கலைப் படைப்பு

விலை ரூ.45/-

**உள்ளூர் ஏஜெண்டிடம் பதிவு செய்து கொள்ளுங்கள்.**
**அல்லது பதிவுத் தபாலில் பெற ரூ 60/- அனுப்ப வேண்டும்.**

பாரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி, பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன். ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

உங்கள்
அன்றாட சுவை
விருந்துக்கு ஓர்
அணிகலன்
திருப்தி

## முழுமையான திருப்தியை நாடும் இன்றைய பெண்மணி காட்டும் வழி




திருப்தியின் நியூட்ரிஃப்ரெஷ் தொழில்நுட்பம் காரணமாக எல்லா சத்துப் பொருள்களும் முழுமையாகப் பாதுகாக்கப் படுகின்றன.

நாங்கள் இன்றைய பெண்மணிகள். எங்கள் தேவைகளைச் சரியாக அறிவோம். அவைகளைக் கேட்டுப் பெறுவோம். எங்கள் செயல்களிலெல்லாம் முழுத் திருப்தி வேண்டும். என் வீட்டுக்கும் குடும்பத்துக்கும் வாங்கும் பொருள்கள், எல்லாவற்றையும் விட நல்லதாக இருக்க வேண்டும். சிக்கனம், சேமிப்பு என்று சொல்லி, தரம் குறைவான பொருள்களை வாங்குவதை விட கொஞ்சம் அதிகம் கொடுத்தாலும் மிக நல்லதையே வாங்குகிறேன். தேவையானது கிடைக்கும் வரை எனக்குத் திருப்தி இல்லை.

திருப்தி தயாரிப்பு ஆட்டா, மைதா மற்றும் ரவை ஆகியவற்றைத் தேர்ந்தெடுக்க இதுவே காரணம். ஏனென்றால் தரமான நேர்த்திமிக்க பஞ்சாப் கோதுமையில் விசேஷ நியூட்ரி:ப்ரெஷ் தொழில்நுட்ப முறைப்படி திருப்தி தயாராகிறது. இது திருப்திக்கே உரிய தனிச்சிறப்பான தயாரிப்பு முறை. இதனால் எல்லா மூலச்சத்துக்களும் சேமிக்கப்படுகின்றன. இதுவே ஓர் எடுத்துக்காட்டு: நான் செய்யும் எல்லாவற்றிலும் என் வாழ்க்கையே திருப்தி மயம்.




திருப்திக்கும் பயன்படும் பஞ்சாப் கோதுமை ஓர் ஆரோக்கியப் பெட்டகத்திற்குச் சமம். உங்கள் உடலுக்குத் தேவையான போஷாக்குச் சத்து நிறைந்த நார் வகைகள், ப்ரோட்டீன்கள், வைட்டமின்கள், தாதுப் பொருள்கள் அத்தனையும் சங்கமம்.




NEPC AGRO FOODS LIMITED

பதிவு அலுவலகம்: 35, வாலாஜா சாலை, சென்னை - 600 002. ஃபோன்: 8525041, 8524541

மார்க்கெட்டிங் அலுவலகம்: ஜி.ஆர். காம்ப்ளெக்ஸ் அனெக்ஸ், 407/408, அண்ணா சாலை, நந்தனம், சென்னை 600 035 ஃபோன்: 4344580, 458650

